பதிவு எண் எம். 8798

மக்களைத் தாக்கும்
மறைமுக வரியை
எதிர்த்துப் போராட
உங்கள் சின்னம்

அரிவாள் சுத்தியல்
நட்சத்திரத்திற்கே!


# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்


மதுரையில் தேர்தல் பேரணி
நாள்: 4-3-71
காலம்: மாலை 4 மணி
இடம்: செல்லூர் களத்து பொட்டலில் இருந்து
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளர்களை ஆதரித்து பிரம்மாண்டமான பேரணி புறப்படும்!

கதிர் 9] மதுரை 4—3—71 வியாழக்கிழமை (வெளியூர் வெள்ளிக்கிழமை 5—3—71) 4 பக்கங்கள் 12 காசுகள் [மலர் 25

# மார்க்சிஸ்ட் கட்சியை வெற்றி அடையச் செய்வீர்!

## முதலாளித்துவப் பாதைக்கு மாற்று வழி காட்டுவது மார்க்சிஸ்ட் கட்சி!

கல்கத்தா, மார்ச் 1

**24 ஆண்டுகளாய் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கடைப்பிடித்துவந்த ஞானசூன்யமான முதலாளித்துவப் பாதையின் காரணமாக-நாட்டிலே வேலையில்லாத் திண்டாட்டமும், விலைவாசி உயர்வும் வெறியாட்டமும் கூப்பாடும் போடுகின்றன.**

**இன்று ஒன்றையொன்று எதிர்ப்பதாகக் காட்டிக் கொள்ளும் சிண்டிகேட் அணியும், இண்டிகேட் அணியும் இந்த முதலாளித்துவப் பாதைக்கு மாற்றுப் பாதையைக் கடைப்பிடிக்கப் போவதில்லை!**

**இந்த இரண்டு கேட்டுகளும் மக்களின் விரோதிகளே என்று பறைசாற்றும் மாககிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி – மக்கள் முன்னிலையில் பின்வரும் மாற்றுத் திட்டத்தினை சமர்ப்பித்து வாக்குக் கேட்கின்றது!**

பெரு முதலாளிகள், நிலப் பிரபுக்கள் ஆகியோரின் பொருளாதார, அரசியல் பலத்தனை வீழ்த்தாதவரையில் உண்மையான சுதந்திரமும், ஜனநாயகமும் கிட்டாது.

உதட்டளவில் "சோஷலிச" கோஷங்களை முழக்கி ஓட்டுப் பறிக்க முயற்சிக்கிறார் இந்திராகாந்தி அம்மையார்.

ஜனசங்கம், சுதந்திரா, சிண்டிகேட் ஆகிய கட்சிகள் பச்சையாகத் தங்கள் பிற்போக்குத் திட்டத்தை முன் வைத்துள்ளன.

வலது கம்யூனிஸ்டுகளும், எஸ். எஸ். பி. யும் போலி வாக்குறுதிகளை அள்ளிப் பொழிவதில் "ஆர்வமுடன்" ஈடுபட்டுள்ளனர். இந்நிலையில் —உடனடியாக நிறைவேற்றப்பட—; மக்களின் முன்னிலையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சமர்ப்பிக்கும் மாற்றுத் திட்டங்கள் இவைதான்.

### முதலாளித்துவ பாதை

ஞானசூன்யமான முதலாளித்துவப் பாதையினை கடந்த 20 ஆண்டு காலமும் தொடர்ந்து கடைபிடித்து வரும் காங்கிரசையும், மத்திய அரசாங்கத்தையும் எதிர்த்துப் போராட உண்மையான ஜனநாயகக் கட்சிகள், அமைப்புகள், குழுக்கள், தனி மனிதர்கள் முன் வருவார்கள் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எதிர்பார்க்கிறது.

காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கடைபிடித்த இந்த முதலாளித்துவப் பாதைதான்— நாட்டைப் பிச்சை எடுக்கும் நாடாக மாற்றிவிட்டது. சுயமரியாதையை காற்றிலே பறக்கவிட்டு— உலக நாடுகள் தோறும் பிச்சைப் பாத்திரம் ஏந்தி அலையவிட்டது. வேலையில்லாத்திண்டாட்டமும் விலைவாசி உயர்வும் வரி உயர்வும் கோடான கோடி சாதாரண மக்களை வாட்டி வதைத்தது.

### மாற்றுப் பாதை

இந்நிலையில்இந்தமுதலாளித்துபபாதைக்கு மாற்றுபபாதையாக உடனடியாக நிறைவேற்றுதற்குரிய திட்டங்கள் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சமர்பிக்கும்திட்டங்கள் இவை தான்;—

1. அந்நியநாட்டுமுதலாளிகளின் தொழிற்சாலைகள் வங்கிகள், தோட்டங்கள், சுரங்கங்கள் ஆகியவற்றையும் அவர்களுடைய பிற உடைமைகளையும் தேச உடைமை ஆக்க வேண்டும். அதன் மூலம்— அந்நிய நாடுகளுக்கு நம் செல்வம் கொள்ளையடித்துச் செல்வது தடுத்து நிறுத்தப்படும்!

2. அரசாங்க மட்டத்திலான ஒப்பந்தங்களையும் சர்வதேச மட்டத்திலான ஒப்பந்தங்களையும்- மறு பரிசீலனை செய்வது; அவற்றில் தேசிய நலனுக்குப் பாதகமான ஷரத்துக்களை நீக்குவது.

3. அந்நிய முதலாளிகளுக்குச் சொந்தமானவையாக இருந்தாலும்— இந்தியப் பெரு முதலாளிகளுக்குச் சொந்தமானவையாக இருந்தாலும்— அனைத்து கனரக மத்திற சாலைகளையும், பொருளாதாரத்தின் இதர முக்கிய துறைகளையும் தேச உடைமை ஆக்க வேண்டும்.

4. தேசிய மயமாக்கப்பட்டவற்றின் மீது திறமையான ஜனநாயகரீதியான கட்டுப்பாட்டினை ஏற்படுத்துவது; அவற்றின் நிர்வாகத்தில தொழிலாளர்களும் பங்கேற்க செய்வது உற்பத்தியை உயர்த்துவதற்கான உத்வேகத்தை தொழிலாளர்களுக்கும் ஊழியர்களுக்கும் மூட்டும், விரயமாவதைத் தடுக்க முடியும்; தேசிய மயமாக்கப்பட்ட துறையிலிருந்து கிட்டும் சேமிப்பு அளவினை உயர்த்த முடியும்; அதே சமயத்தில்- தொழிலாளர்கள் ஊழியர்கள் ஆகியோரின் வாழ்க்கைத்தரத்தை அபிவிருத்தி செய்ய முடியும்!

### நிலப்பிரத்துவ ஒழிப்பு

5. கிராமப்புறங்களின் நிலப்பிரபுத்துவ நலன்களை முழுமையாக அழிப்பது; நஷ்ட ஈடின்றி மன்னர்களின் மானியத்தையும் சலுகைகளையும் ஒழிப்பது; ஜமீந்தார்களுக்கும் இதர நிலப்பிரபுக்களுக்கும் அளிக்கப்பட்டுக்கொண்டிருக்கும் நஷ்ட ஈட்டினை ஒழிப்பது; பெரு நிலப்பிரபுக்களின்பெரும் எஸ்டேட்டுகளை அரசாங்கமே எடுத்துக்கொள்வது,

6. விவசாயத் தொழிலாளர்களின் கூலி விகிதத்தை உயர்த்த தீவிரமான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்: விவசாயத் தொழிலாளர்கள், கைவினைஞர்கள், பிற கிராமப்புற ஏழைப்பகுதியினர் ஆகியோர் தம் வாழ்க்கை நிலையையும், வேலை நிலையையும், உயர்த்தத் தீவிரமான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் இந்த கிராமப்புற ஏழைகளிடம பெரு நிலப்பிரபுக்களின் உபரி நிலத்தை விநியோகிக்க வேண்டும்; அதுபோலவே சிறு சிறு துண்டு துக்காணி நிலங்களை வைத்திருக்கும் ஏழை விவசாயிகளுக்கும் விநியோகிக்க வேண்டும்; விதைகள், உரங்கள், தண்ணீர், பிற விவசாய சாதனங்கள் ஆகியவை ஏழை விவசாயிகளுக்கும், மத்தியதர விவசாயிகளுக்கும் பெருமளவில்தாராளமாகக் கிடைப்பதற்கு தீவிரமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும். ஆகியவை ஏழை விவசாயிகளுக்கும், மத்தியதர விவசாயிகளுக்கும் பலன் கிடைக்கும் வகையில் கடன் சங்கங்களையும், கூட்டுறவு சங்கங்களையும் திருத்தி அமைக்க வேண்டும்;

7. ஒரு புறத்தில் ஏழை விவசாயிகளுக்கும், மத்தியதர விவசாயிகளுக்கும்—மறு புறத்தில பொருள்களை வாங்கி உபயோகிக்கும் பொதுமக்களுக்கும் பயன்படும் வகையில் தானியக் கொள்முதல் கொள்கையையும், விலைக் கொள்கையையும் முழுமையாகத் திருத்தி அமைக்க வேண்டும்.

8. ஏழைகளுக்கு பயனுள்ள வகையில் நிவாரணம் அளிக்கக்கூடிய அதே சமயத்தில்— பணக்காரர்களுக்கு மேலும் மேலும் சுமை அதிகரிக்கும் வகையிலும் வரி விதிப்புக் கொள்கையை மாற்றி அமைக்க வேண்டும்.

இத்தகைய நடவடிக்கைகளை எடுத்து—முந்தைய கொள்கைகளை தகர்த்து எறிந்தால் தான்—நாட்டினை எதிர் கொண்டுள்ள கடும் நெருக்கடியிலிருந்து மீள முடியும்.

நாட்டில் உள்ள ஒவ்வொரு குடும்பத்தையும் ஒவ்வொரு தனி நபரையும் பாதிக்கும் இரண்டு முக்கிய அம்சங்கள்— விலைவாசி உயர்வும், வேலையில்லாத் திண்டாட்டமுமே! இப்பிரச்சனைகளுக்கு தீர்வு காண ஒரு அரசாங்கம் எடுக்க வேண்டிய ஆரம்ப நடவடிக்கைகள் இவையே!

எனவே—இவற்றை அமுல் படுத்துவதற்காக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போராடும்; உண்மையான ஜனநாயகக் கட்சிகளையும், குழுக்களையும் தனி மனிதர்களையும் இரண்டு காங்கிரஸ்களையும், பிற ஆளும வர்க்கக்கட்சிகளையும் அரசியல் களத்தில் எதிர்த்துப்போராடி முறியடிக்க, மககளின் சட்ட ரீதியான உரிமைகளைப் பெறவும் முன் வருமாறு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அழைக்கின்றது;

### போராடிப் பெற வேண்டிய உரிமைகள்

ஆளும் வர்க்கங்களிடம் போராடிப் பெறவேண்டிய சட்ட ரீதியான உரிமைகளாவன;

1. கடுப்புக்காவல் சட்டம், தொழிற்பாதுகாப்புச்சட்டம் இவை போன்ற அடக்குமுறை சட்டங்களை வாபஸ் வாங்க வேண்டும்.

2. தொழிலாளர்கள் வேலை நிறுத்தப் போராட்டங்களையும் பிற போராட்டங்களையும் தடுப்பதற்காக தடையுத்திரவுகள், பாதுகாப்பு நடவடிக்கைகள் என்ற பெயரில்அடக்குமுறை நடவடிக்கைகள் எடுப்பதற்கு முடிவு கட்ட வேண்டும்.

3. தொழிலாளர் போராட்டங்கள் பிற வெகுஜனப் போராட்டங்களின் தொடர்பாக கைது செய்யப்பட்ட அனைவரையும் விடுதலை செய்ய வேண்டும்; அனைத்து வழக்குகளையும் வாபஸ் வாங்க வேண்டும்.

4. அந்நிய முதலாளிகள், இந்தியப் பெருமுதலாளிகள், மாஜி மன்னர்கள், பெரு நிலப்பிரபுக்கள் மேல் தட்டு வர்க்கத்தினரின் சொத்துரிமைக்கு எதிராக— நாடாளுமன்றமும் சட்ட மன்றங்களும் சட்டமியற்ற வழிகோலும் வகையில் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் தேவையான திருத்தங்கள் செய்யவேண்டும். அத்துடன்— சாதாரண மக்களுக்குச் சொந்தமான நிலங்களையும் சிறு உடைமையையும், உற்பத்தி சாதனங்களையும் அவர்கள் வைத்துக்கொள்ளும் உரிமை உட்பட, ஜனநாயக உரிமைகளை மேலும் பலப் படுத்துவது.

5) நாட்டு மக்களிடையே வேகமாகத் தோன்றிவரும் தேவைகளுக்கும் தலைமை நீதி மன்றங்கள், உயர்நீதிமன்றங்கள் ஆகியவற்றின் பிற்போக்குக் கண்ணோட்டத்திற்கும் இடையே முற்றிவரும் முரண்பாட்டிற்கும் தீர்வுகாண வேண்டும். இந்த நீதிமன்றங்களின் தீர்ப்பு சட்டரீதியானதாக இல்லாமல் "அரசியல்" நோக்கம் படைத்ததாக விளங்குகின்றன.

எனவே— உடைமை வர்க்கங்களுக்குச் சாதமாக பாரபட்சமாக உள்ளவர்களுக்குப் பதிலாக— நாட்டில் உள்ள சமுதாய பொருளாதார அமைப்பில தீவிர மாறறம் தேவையென்று கருதுபவர்களைக் கொண்டு— நீதித்துறையை முழுமையாகத் திருத்தி அமைக்க வேண்டும்! சாதிக அநீதிகளையும், சமத்துவமின்மையையும், ஒடுக்குமுறையையும் நீக்க வகைசெய்யும் சட்டங்களை அடித்து வீழ்த்தும் அதிகாரத்தை நீதிமன்றங்களிடமிருந்து பறித்துவிடவேண்டும்.

இன்றைய அரசியல் அமைப்புச் சட்டம் கடந்த 20 ஆண்டு காலமாக இயங்கி வந்திருப்பதைக் காணும்போது— அதன்

4-ம் பக்கம் பார்க்க

## தோழர் என். ஆர். இராமசாமியின் மண்டையை உடைத்தனர்!

### தி. மு. க. காலிகளின் கல் வீச்சு!

நெய்வேலி, மார்ச். 2— பண்ருட்டி சட்டமன்றத் தொகுதியில் ஏற்பட்டுள்ள மும்முனைப் போட்டியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு நாளுக்கு நாள் ஆதரவு பெருகி வருவதைக் கண்ட தி. மு. க. வினருக்கு வயிற்றில் நெருப்பை மூட்டியுள்ளது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தெ. ஆற்காடு மாவட்டச் செயலாளர் தோழர் எஸ். நடராசன் போட்டி இடுகிறார். அவரை எதிர்த்து முன்னாள் தி. மு. க. எம். எல். ஏ எஸ் ராமச்சந்திரனும் மற்றும் சிண்டிகேட்டும் போட்டி இடுகின்றனர்.



### கருணாநிதியின் இரும்புக்கரம்

1967 தேர்தலில் நாங்கள் 'தொழிலாளர் நல அரசு' காகித் தப்பூ மணக்காது காங்கிரஸ் சோஷலிசம் இனிக்காது' அப்படி என்றும், இப்படியென்றும் வீரமுழக்கம் இட்ட கருணாநிதி அரசுபீடம் ஏறியபின் 1970 ம் ஆண்டு மே மாதம் 3 ஆம் தேதி நெய்வேலியில் காட்டிய இரும்புக் கரம் அவரது தொழிலாளர் நல முகமூடியை கிழித்து விட்டது.

நெய்வேலித் தொழிலாளர்கள் கருணாநிதியின் உண்மைத் தோற்றத்தைக் கண்டு கொண்ட அதன்பின் அங்கு தி. மு. க.வை அறவே ஒழித்தனர்.

### கனவில் கண்டதை நினைவில் நாட்ட......

ஆனால் 67தேர்தலில் இருந்த நிலைமைதான் 72 லும் இருக்கும் என்று பகற் கனவில் பால் குடித்த தி. மு க வினர் இன்றும் தேர்தலில் இறங்கியுள்ளனர்; அன்று கூலி கேட்டுப் போராடிய தொழிலாளர் தோள்களைப் பதம்பார்த்த கலைஞரின் ஆட்கள் இன்று மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் எப்படி ஓட்டு கேட்பது என்று தவிப்பதோடு, வாக்காளர்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த நமது தோழர்களின் மீது தனது அராஜகப் போக்கை காட்டத்துணிந்துள்ளனர்.

### மாணவர் ஆதரவு

தி மு க.வின் மாயையிலும் காமராஜ் மாயையிலும் மயங்கி இருந்த மாணவர்கள் இந்தத்தேர்தலில் மார்க்சிஸ்ட் கட்சிக்கு ஆதரவு தெரிவிப்பதைக்கண்டதும் தி. மு. க.வினருக்கு எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றியது போலாயிற்று.

### கிராமங்களிலும் அதே நிலை

நெய்வேலியிலிருந்த இந்த நிலைமைக்கண்டு வெகுண்ட தி. மு. க.வினர் தனது கோப ஆவேசத்துடன் கிராமங்களுக்குச் சென்றனர். ஆனால் கிராமங்களில் அதைவிடப் பன் மடங்கு எதிர்ப்புதான் அவர்களுக்கு கிடைத்தது.

இவையெல்லாம் பாவம் தி மு க. வினரை திகைக்கச் செய்தது. மேலும் முன்னாள் எம் எல். ஏ இந்த தேர்தலில் தானே வெற்றி பெற வேண்டு என்று எண்ணி 3 தொகுதிகளுக்குப் பிரிக்கப்பட்டிருந்த நெய்வேலியை ஒரே தொகுதி

4-ம் பக்கம் பார்க்க

★ கைதிகளை வைத்து வேலை நிறுத்தத்தை உடைப்பவர்களுக்கா உங்கள் வாக்கு? ★

தீக்கதிர்

"சொத்துடைமை முதலாளிகள் கைகளில் அனுமதிக்கப்படுகிற வரையில், ஜனநாயகம் என்பதெல்லாம், சுரண்டல் வர்க்கத்தின் சர்வாதிகாரத்தை போலித்தனமாக மூடி மறைப்பதன்றி வேறு ஒன்றுமல்ல.

—லெனின்

# காமராஜரின் உள் நோக்கம் என்ன?

காமராஜர் வாக்காளர்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார். "நவசக்தி" பத்திரிகை மார்ச் 3-ம் தேதி இதழில் வெளியாகியுள்ள அந்த வேண்டுகோள் இது தான் :

"ராட்டைச் சின்னத்தில் முத்திரையிடுங்கள். பிறகு நான் பார்த்துக் கொள்கிறேன். குழந்தைகளுக்கு படிப்பு, உணவு, உடை, வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தருவது என் கடமை. நான் பொறுப்பேற்றுக் கொள்ளுகிறேன்" என்பதே அந்த வேண்டுகோள்.

இந்த வேண்டுகோள் வெளியாகியுள்ள பத்திரிகையின் முதல் பக்கத்திலேயே இன்னொரு விளம்பரமும் வெளியாகியுள்ளது. ராஜாஜியுடன் காமராஜர் ஒன்றாக நிற்கும் படத்தின் கீழ் "காங்கிரஸிற்கு வாக்களியுங்கள் சுதந்திராவிற்கு வாக்களியுங்கள்" என்ற வாசகங்கள் பொறிக்கப்பட்டிருக்கும் விளம்பரமே அது.

இந்தக் காமராஜர் யார்? இந்த ராஜாஜி யார்? இவர்கள் ஏன் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் என்று வாக்காளர்கள் வினவுகின்றனர்.

இத்தனை ஆண்டுகளாகக் காமராஜர் தன்னை "ஏழை பங்காளன்" என்று கூறிக் கொண்டிருந்தார். பணம் எங்கே இருக்கிறது என்று தனக்குத் தெரியும் என்றும் அது பணக்காரர்கள் வீட்டு இரும்புப் பெட்டிக்குள் குறட்டை போட்டுக் கொண்டிருப்பது தன் காதுகளுக்குக் கேட்கிறது என்றும் அதை வரி போட்டு எடுக்க விடாமல் ராஜாஜி எதிர்க்கிறார் என்றும் காமராஜர் குற்றம் காட்டியதை மறுக்க முடியுமா?

ராஜாஜியின் சுதந்திரா கட்சியுடன் திட்டத்தின் அடிப்படையில் கூட்டணி சேர்வதற்கு ராம்சுபாக்சிங் போன்ற சிண்டிகேட் தலைவர்களே எதிர்ப்புத் தெரிவித்தனர். அத்தகைய சுதந்திரா கட்சியுடன் கூட்டுச் சேர்ந்திருக்கும் காமராஜரின் உண்மை நோக்கத்துக்கும் ஏழைகளின் வாழ்வுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்க முடியுமா?

ராஜாஜியைப் பற்றி இத்தனை ஆண்டுகளாகக் காமராஜர் செய்து வந்த பிரசாரத்தை மக்கள் மறந்து விடவில்லை.

ராஜாஜியைப் பற்றி அன்று கூறியது உண்மையா இன்று அவர் கூறுவது உண்மையா?

இந்த வாரத்தில் கூட மன்னர்கள் மானியத்தை நீடிக்க வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கும் ராஜாஜியுடன் சேருவதின் மூலம் காமராஜர் ஏழை மக்களுக்கு என்ன நன்மை செய்ய முடியும்?

### பெரு முதலாளிகளுக்கும் மன்னர்களுக்கும் பாதகமில்லாத சோஷலிசமாம்!

## சோஷலிச "வீராங்கனை" இந்திராகாந்தி சொல்லுகிறார்!

ஜர்கான் பிப். 28—

75 இந்திய ஏகபோக முதலாளிகளின் சொத்துப் பத்துக்களை கைப்பற்றாமல்—அன்னிய ஏகாதிபத்திய நிறுவனங்களையும் கைப்பற்றாமல்—பெரு நிலப்பிரபுக்களின் நிலங்களைக் கைப்பற்றி உழுபவர்களுக்குக் கொடுக்காமல் — சோஷலிஸம் கொண்டு வரப்போவதாகக் கூறுவது பொதுமக்களை வஞ்சிப்பது அல்லவா!

இங்கு 28—2—71-ல் நடந்த தேர்தல் பொதுக்கூட்டமொன்றில் இந்திராகாந்தி பேசுகையில் "நாங்கள் குறிக்கோளாகக் கொண்டுள்ள சோஷலிசத்தைப்பற்றி எங்கள் மீது பொய்யான குற்றச்சாட்டுகளை எதிர்க்கட்சிகள் சாட்டுகின்றன. அதையெல்லாம் நம்பாதீர்கள்.

"எங்கள் அரசாங்கம் பெரு முதலாளிகளுக்கும், மன்னர்களுக்கும் எதிரானது அல்ல.

ஆனாலும், சாதாரண மக்களின் வாழ்க்கை நிலைகளை அபிவிருத்தி செய்ய சோஷலிஸ்ட் நடவடிக்கைகளை மேற்கொள்ளாவிட்டால் மக்கள் கலகத்திற்குக் கிளம்பிவிடுவார்கள் என்ற அபாயம் இருக்கிறது" என்று பேசியிருக்கிறார்.

செய்தி மெயில் 2—3—71

அதாவது பெரு முதலாளிகளையும் மன்னர்களையும் பாதிக்காத முறையில்—சோஷலிசம் கொண்டு வருவாராம் இந்திரா!

அதாவது, மேட்டை வெட்டாமல், பள்ளத்தை நிரப்புவாராம் இந்திரா!

இதுமாதிரி வித்தை வேறு யாருக்கும் தெரியாது; இந்திரா காந்திக்குத்தான் தெரியும்.

அதைத்தான் முற்போக்கு என்றும்— சோசலிச மாரியாத்தா என்றும்— தி.மு.க. உடுக்கடிக்கிறது! வலது கம்யூனிஸ்ட் பீப்பி ஊதுகிறது!

# தஞ்சை மாவட்டத்தில் தி.மு.க. வெறியாட்டம்!

# பாரதிமோகன் கண்டனம்

மார்க்சிஸ்ட் கட்சியின் தஞ்சைமாவட்ட செயற்குழு உருப்பினரும், நாகப்பட்டிணம் நாடாளுமன்ற வேட்பாளருமான தோழர் கோ. பாரதிமோகன் விடுத்துள்ள அறிக்கை.

திருவாரூர், மார்ச். 4— இந்தியக்கம்யூனிஸ்டுகட்சி தஞ்சை மாவட்ட செயற்குழு சார்பில் தோழர் கோ பாரதிமோகன் கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்:—



நாகை, மாயவரம் தொகுதிகளின் வாக்குப்பதிவுநாள் நெருங்க நெருங்க பல இடங்களில் தங்களது தோல்வி நிச்சயமாவதைக்கண்டு தி.மு.க. வினரும் அவர்களது கூட்டணி கட்சிகளும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களையும் வேட்பாளர்களையும் கொலை செய்யும் முயற்சியில் இறங்கியுள்ளனர்.

1-3-71 திங்கட்கிழமையன்று பாலில் திருவாரூர் தொகுதிக் கமிட்டி சார்பாக நடத்தப்பட்ட சைக்கிள் ஊர்வலம் [illegible] ஊரிலிருந்து திருவாரூர் வந்துகொண்டிருந்த பொழுது, [illegible] மனக்கிராமத்தில் வலது சாரி கம்யூனிஸ்ட் குண்டர்கள் தி.மு.க. உதவியோடு அந்த ஊர்வலத்தை தாக்கியுள்ளார்கள். நகை தாலுகா வலது சாரி கம்யூனிஸ்ட்கட்சி காரியதரிசி பாலகிருஷ்ணனும் இதர நபர்களும் கம்பு, கற்கள், இதர ஆயுதங்களைக்கொண்டு மார்க்சிஸ்ட்கட்சி ஊர்வலத்தை தாக்கியிருக்கிறார்கள். இத்தாக்குதலில் திருவாரூர் சட்டமன்ற வேட்பாளர் வி. தம்புசாமியும் மற்றும் 14 தோழர்களும் பலத்த காயமுற்று மருத்துவமனைக்கு அழைத்துச்செல்லப் பட்டிருக்கிறார்கள். தோழர் கோவிந்தசாமியின் ஒரு கன்னம் ஆயுதத்தால் கிழிக்கப்பட்டுள்ளது.

இரு நாட்களுக்கு முன் குத்தாலம் தொகுதி மங்கநல்லூரிலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தேர்தல் மேடையில் தி.மு.க. வினர் நுழைந்து, அங்கிருந்த நமது தோழர்களை தாக்க முயற்சித்துள்ளனர்.

அதேபோல் கொடவாசல் தொகுதி திருப்பாம்பரத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி வேட்பாளர் தோழர் கோ. வீரய்யனைத்தாக்குவதற்கு தி.மு.க. வினர் முயற்சித்துள்ளனர். கொரடாச்சேரியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் வீரய்யனை குறிவைத்து கற்கள் வீசப்பட்டிருக்கின்றன. நாகப்பட்டிணம் தொகுதியிலும், பல்வேறு இடங்களில் தி.மு.க. வினர் ஆத்திரமூட்டும் நடவடிக்கைகளில் இறங்கியுள்ளன.

இவ்வளவு தகராறுகள் குறித்து போலீசாரிடம் புகார் செய்தும் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்பதோடு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் போஸ்டர்களையும் 20-க்கு மேற்பட்ட போலீஸ்காரர்கள் ஸ்டேஷனுக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள்.

எனவே மாவட்ட ஆட்சித் தலைவரும் காவல்துறை கண்காணிப்பாளரும், சம்பந்தப்பட்ட நபர்கள் மீது, தக்க நடவடிக்கை எடுத்து தேர்தலை அமைதியாகவும், நேர்மையாகவும் நடத்த ஆவன செய்ய வேண்டும்.

### அரசியல் சட்டம்-15

# பிற்போக்காளர் சதிகளைத் தகர்த்து முன்னேறுவோம்!

பி. டி. ரணதிவே

வெகுஜன இயக்கத்துக்கு எதிராக அரசியல் சட்டத்தைப் பயன்படுத்த முதலாளி வர்க்கக் கட்சிகள் முயலும் நிலையில் அரசியல் சட்டம் முதலாளி வர்க்கக் கட்சிகளின் யுத்தகளம் ஆகும் அளவுக்கு நெருக்கடி ஆழமாகியுள்ளது. அரசியல் சட்டத்தின் பிரிவுகளை தங்களுடைய நிலைகளுக்குப் பொருந்தும் முறையில் வெவ்வேறு வர்க்கப் பிரதிநிதிகள் வெவ்வேறு வித விளக்கம் தருகிறார்கள். முடிவான கணிப்பில் இவையெல்லாம் வெகுஜன இயக்கத்தை முறியடிக்க முயலுவதற்கான வெவ்வேறு வழிகளே. ஆகவேதான் அரசியல சட்டம் சம்பந்தமாக எடுக்கப்படும் ஒவ்வொரு நடவடிக்கையையும் கவனமாகப் பார்த்து முறியடிக்கவேண்டியது அவசியமானதாகும்.

உதாரணமாக உ. பி. சம்பவத்தில் பிற்போக்கு சரண்சிங் பதவியில் நீடிக்கவேண்டுமா நீடிக்கக்கூடாதா என்ற பிரச்னை எழவில்லை. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றத்துக்குப்பதில் ஜனாதிபதியும் கவர்னரும்தான் செயல்படவேண்டுமா என்ற கேள்விதான் அங்கு எழுந்தது. எதேச்சாதிகாரமான முறையில் இந்திரா காங்கிரஸ் செயல்படுவதற்கு அனுமதிக்கவேண்டுமா என்ற கேள்விதான் அங்குஎழுந்தது இந்திரா காங்கிரஸ்செய்த சதியில் அப்போது திருத்தல்வாதிகளும் சேர்ந்துகொண்டனர்.

தங்களுடைய விடுதலைக்காக மக்கள் நீண்ட போராட்டம் நடத்தவேண்டியிருக்கும்போது உடனடிச் சம்பவங்களையும் அவர்கள் புறக்கணிக்க முடியாது. வர்க்கப் போராட்டச் சுழற்சிக்குள் அரசியல் சட்டம் தேர்தல் நாடாளுமன்றம் முதலியவை இழுக்கப்படுகின்றன. மக்களுக்கு எதிரான தாக்குதல் தொடுப்பதற்கு வாய்ப்பான இடங்களைப் பிடிப்பதற்கு பிற்போக்கு சக்திகள் முயலுகின்றன. அவர்களுடைய சூழ்ச்சிகளை மக்கள் முறியடிக்கவேண்டும்.

அவ்வாறு செய்வதற்கும் வெற்றியை நோக்கி முன்னேறுவதற்கும் ஜனநாயக சக்திகளின் வலுவான ஒற்றுமை அத்தியாவசியமாகும். கேரளத்திலும் மேற்கு வங்கத்திலும் வலது கம்யூனிஸ்டுகளும் ஆர். எஸ். பியும் மற்றவர்களும் இந்த ஒற்றுமையைக் குலைத்து மார்க்சிஸ்ட் எதிர்ப்பு முன்னணியில் காங்கிரசுடன் சேர்ந்துள்ளனர்.

இந்தத் துரோகம் தான் மக்களுடைய போராட்டத்தைப் பலவீனப் படுத்தியுள்ளது. இந்தத் துரோகமே முதலாளி வர்க்கக் கட்சிகள் எல்லாம் அதிகாரத்துக்காக கொள்கைகளைக் கைவிட்டு சண்டையடித்துக் கொண்டிருக்கும் போது மக்கள் முன்னேறிச் செல்வதற்கான வாய்ப்பைத் தடுத்துள்ளது.

இந்த நிலைமை தான் அரசியல் சட்டத்துக்கோ மற்ற கூட்டத்துக்கோ முதாவது ஒரு விளக்கமளித்து மக்களுக்குப் பாதகமான பெரும் மாறுதலைத்தோற்றுவிக்கும் அபாயத்தை ஏற்படுத்தியுள்ளது.

ஆகவே தான் தற்போதைய அரசியல்சட்டத்தைஅடியோடு மாற்றும் உறுதியான லட்சியத்தில் மக்கள் பற்றி நிற்கும்போதே பிற்போக்கு சக்திகள் மக்கள் நிலையைக்குலைக்கும் முறையில் அரசியல்சட்டத்தில் திடீர் மாற்றம் செய்யாதவாறும் விழிப்புடன் பார்த்துக் கொள்ளவேண்டும். இந்த அரசியல் சட்டத்தின் கீழ் மேலும் முன்னேறிச்செல்வதற்கான வாய்ப்புகள் என்ன இருந்தாலும் அவற்றையும் பயன் படுத்திக் கொள்ள எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டும்.




## கிணறு வெட்ட கடன்

ஐயா,

நான் எட்டயபுரத்தை அடுத்த இராமனூத்தில் வாழும் ஒரு விவசாயி

எனக்கு 7 ஏக்கர் புஞ்சை நிலம் இருக்கிறது. ஒரு மழை பெய்தால், அடுத்த மழையை நம்பி உழவடை வேலைகளில் இறங்கிவிடுவோம். சென்ற ஆண்டு, ஒரு மழை பெய்தது. உழவடையும் நடந்தது. அடுத்த மழையும் பெய்தது. விதைப்பாடும் நடந்தது. அப்புறம் இரண்டொரு தூறல் விழுந்தது. பயிர்களெல்லாம் பச்சைப் பசேலென்று ஒரு முழம் உயரம் வளர்ந்தது இன்னும் ஒன்றிரண்டு மழை பெய்தால் மிளகாய், பருத்தி, கம்பு, சோளம், எள்ளு எல்லாம் நல்ல மகசூல் கிடைத்திருக்கும். எங்கள் பக்கத்து விவசாயிகள் பிழைத்திருப்பார்கள்.

ஆனால் மழை பொய்த்துவிட்டது வளர்ந்த பயிர் பூ பருவத்திலேயே கருகிவிட்டன. கண்ணுக்கெட்டிய தூரம்வரையும் இந்தநிலை. விளாத்திகுளம் தாலுகாவிலோ இதைவிடக் கொடுமை! அறவே மழை இல்லை. ஆடுமாடுகளைப் பராமரிக்கக்கூட புல்பூண்டு இல்லை.

இந்த லட்சணத்தில் கிணறு வெட்ட அரசினரிடம் ரூ 5000 கடன் வாங்கினேன். 10 அடி வெட்டினேன். மண்ணு வந்தது. அப்புறம் வெட்ட வெட்ட கல்லுதான்வந்தது. 30 அடிக்கு கடப்பாறையும் வளைந்துவிட்டது. வெட்டிரும்பு உடைந்துவிட்டது, சுத்தியலும் கழன்றுவிட்டது.

அப்புறம் வெடிமருந்து வாங்கித் தகர்த்தேன். 60 அடி போனபின்பு தண்ணீர் கிடைத்தது. அதுவும் ஊற்று அல்ல கசிவுதான்.

அதற்குமேல் வெட்டவும் முடியவில்லை தினம் 50 குடம் தண்ணீர் கிடைக்கும். கமலையால் இறைத்தால் முக்கால் மணி நேரம் இறைக்கலாம். பம்ப்செட் போட்டால் 3 நிமிடத்தில் உறிஞ்சிவிடும் இந்த தண்ணீர் 7 ஏக்கருக்குப் போதுமா? இதற்காக 5000 ரூபாய் லோன், அது போதவில்லையென்று தனியாரிடமிருந்து 3000 கடன்.

இப்போதும் கடன்களும், வட்டியும் சேர்ந்து என் மாட்டையும் ஆட்டையும் விழுங்கிவருகிறது. வரும் ஆண்டிலும் மழை பொய்த்தால் வீட்டையும் விழுங்கிவிடும். எனது 7 ஏக்கர் காட்டையும் விழுசகிவிடும். இதுதான் என் நிலைமை. சாண் ஏறினல் முழம் சறுக்குது.

லோன் வாங்கிய என் போன்றவர்களின் கதி இது தான். இதற்கெல்லாம் விடிவு காலம் வருமா?

பாதிக்கப்பட்ட

ஒரு விவசாயி

இராமனூத்து

## ரங்கண்ணனை ஆதரித்து 1000 பேர் சைக்கிள் ஊர்வலம்

வீரபாண்டி, பிப். 28

இன்று காலை 10 மணிக்கு 1000 சைக்கிள்களில் தோழர்கள் உத்தம சோழ புரத்திலிருந்து ஊர்வலமாக புறப்பட்டு தொகுதியில் முக்கிய ஊர்களான காகா பாளையம் மகுடஞ்சாவடி, வைகுந்தம் வேம்படிதாளம், பெருமா கவுண்டம்பட்டி முதலிய இடங்களைச் சுற்றிக்கொண்டு மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளர் தோழர் கே ரங்கண்ணனுக்கு ஓட்டு கேட்ட வண்ணம் மாலை 6 மணிக்கு எளம்பிள்ளையை அடைந்தது. நமது தோழர்கள் எழுப்பிய கோஷங்களும் செங்கொடிகளுடன் அவர்கள் அணிவகுத்துச் சென்ற பாங்கும் யார்த்தோருக்கு எழுச்சியூட்டியது 'இப்படியும் ஒரு கட்டுப்பாடான ஊர்வலமா?' என்று கிராம மக்களிடையே ஆச்சரியமும் ஆர்வமும் தோன்றும் வண்ணம் அமைந்திருந்த ஊர்வலத்தில் மாக்னிசைட் தொழிலாளர்கள், மில் தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள் மற்றும் பல தரப்பு தோழர்கள் கலந்து கொண்டனர்.

### மாட்டு வண்டிகளிலே

என்றுமில்லாத வண்ணம், மாட்டுவண்டிகள் ஏறத்தாழ 65 வரை ஊர்வலத்தில் கலந்துகொண்ட பாங்கு மிகவும் அற்புதமாக அமைந்திருந்தது. கட்சிக்கு விவசாயப் பெருமக்களின் ஆதரவு எந்த அளவுக்கு பெருகியிருக்கிறது என்ற உண்மை இந்த மாட்டு வண்டி அணிவகுப்பிலே புலப்பட்டது. கொடிகள் பல கட்டிக்கொண்டு விவசாயத் தோழர்கள் எழுப்பிய கோஷங்கள் விண்ணதிரச் செய்தது.

### லாரிகளிலே

3 லாரிகளிலே நமது தோழர்கள் ஒலிபெருக்கிகள் பொருத்திக்கொண்டு அவர்கள் எழுப்பிய கோஷங்கள் மக்கள் மனத்திலே ஓர் உற்சாகத்தையும் எழுச்சியையும் ஏற்படுத்தியது. "சொன்னாரே சொன்னாரே 3 படி சொன்னாரே" போட்டாரா போட்டாரா 3படி போட்டாரா? சுட்டாரே சுட்டாரே நெய்வேலியில், பூந்தாழங்குடியில், கோயமுத்தூரில் சுட்டாரே, என்ற கோஷங்களை எழுப்பிக் கொண்டு மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளருக்கு ஓட்டுக் கேட்டுக்கொண்டு தொகுதி முழுதும் சுற்றி வந்தனர்.

மாலையில் எளம்பிள்ளையில் தேர்தல் பிரச்சாரப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர் கந்தசாமி தலைமை வகித்தார், மாவட்டச் செயலாளர் தோழர் கே. எஸ் அர்த்தனாரி அனைவரையும் வரவேற்றார். வேட்பாளர், கே. ரங்கண்ணன், மாணவர் ஆர். வரதராசன், டாக்டர் துரைசாமி, இஸ்மாயில், இரங்கன், பி. ராமசாமி ஆகியோர் பேசினர்.

## குறிப்புகள்

# தி. மு. க. ஆட்சியின்கீழ் அமைதி ஆனமா நிலமா?

வெளிநாட்டு முதலாளிகள் யார் வந்தாலும் சரி— வெளி மாநில முதலாளிகள் யார் வந்தாலும் சரி — அவர்களுக்கெல்லாம் வரவேற்பு அளித்து விருந்துகள் கொடுத்து ஒரு குளிர்ச்சியான வார்த்தையை அவர்களின் காதிலே போட்டு வைப்பார் கலைஞர் முதல்வர் கருணாநிதி. என்ன சொல்லுவார் தெரியுமா?

"இந்தியாவிலேயே அமைதியான மாநிலம் தமிழ்நாடு தான்! கழக ஆட்சியில் சட்டமும் ஒழுங்கும் சமூக அமைதியும் நன்கு பாதுகாக்கப்படுகிறது"—என்றே கூறுவார் கருணாநிதி.

அத்துடன் அவர் நிறுத்துவதில்லை.

"இந்தியாவில் சில இடங்களில் காணப்படுவதுபோல, அமளி துமளிகள் தமிழ்நாட்டில் கிடையாது"—என்றும்ஒருபோடு போட்டு வைப்பார், வங்க, கேரளத்தை மனதில் வைத்து!

### அமைதிக்கு உள்ளே அடங்கியுள்ள உண்மை

இனிப்பான இந்த வார்த்தைகளுக்குள்ளே அடங்கிய வர்க்க அரசியல் என்ன தெரியுமா?

ஏ, டாட்டாக்களே! பிர்லாக்களே! — டால்மியாக்களே! கோயங்காக்களே! அன்னியநாட்டு முதலாளிகளே! —வங்காளத்தில் முதலீடு செய்யாதீர்கள். அங்கே சம்பள உயர்வு கேட்டு கெரோ போராட்டம் நடத்துகிறார்கள். அவர்களை அடித்து ஒடுக்கப் போலீஸ் படையை அனுப்ப மறுக்கிறார் ஜோதிபாசு. அது மாதிரிதான் கேரளத்தில் இ. எம். எஸ். ஆட்சியும். அதனால்தான் சொல்லுகிறேன். அங்கு முதலீடு செய்தால், கூடுதல் சம்பளம் கொடுக்க வேண்டியிருக்கும்; கொள்ளை லாபம் அடித்திட முடியாது.

'தமிழ்நாட்டிலோ, தொழிற்சங்க இயக்கம் வங்கம் போல் பலமாக இல்லை. அதிகக் கிளர்ச்சிகள் நடக்காது. அப்படியே நடந்தாலும் எங்கள் கழக அரசு பார்த்துக் கொள்ளும். இரும்புக்கரம் இருக்கவே இருக்கிறது. இங்கு முதலீடு செய்தால் கூடுதல் சம்பளம் கொடுக்கவேண்டாம் கொள்ளை லாபம் அடிக்கலாம்"—என்று மவுன மொழியில் பேசியதாக அருத்தம். ஏனென்றால் நடைமுறை அனுபவத்தை வைத்துத்தானே பேச்சுகளின் உட்கருத்துக்களைப் புரிந்து கொள்ள முடியும்!

### பத்தாயிரக்கணக்கில் தற்கொலை

அமைதியான மாநிலம் என்று கருணாநிதியார் குறிப்பிடுகின்றபோது, ஏதோ தமிழகத்தில் நல்லாட்சி நடைபெற்று, எல்லோர் வீட்டிலும் இன்பமும் எழிலும் சிரிப்பும் செழிப்பும் தாண்டவமாடுவதுபோல படம் காட்டப்படுகிறது.

உறு பசியும் ஓவாப் பிணியும்
செறு பகையும் சேராது இயல்வது நாடு

என்று வள்ளுவர் குறிப்பிட்ட நாடாக தமிழகம் அமைந்துவிட்டதுபோல படம் காட்டுகிறார் கலைஞர்: ஆனால் உண்மை நிலை என்ன?

பசி பட்டினியாலும், வேலையில்லாக் கொடுமையாலும், வறுமையால் ஏற்பட்ட வீட்டுச் சச்சரவுகளாலும் மனச்சோர்வுற்று, முழக் கயிற்றினிலே — மூட்டைப்பூச்சி மருந்தினிலே—இரயில்வே தண்டவாளத்திலே—ஆறுகுளம் கிணறுகளிலே தற்கொலை செய்து மாளுவோர் தொகை— காங்கிரஸ் ஆட்சிகாலத்தில் எப்படியோ, அதுபோல, அதைக் காட்டிலும் பலமடங்கு அதிகமாகவே நடைபெற்றுக்கொண்டிருக்கிறது.

தற்கொலைகளின் எண்ணிக்கையைப் பார்த்தால் ஆச்சரியப்படுவீர்கள்.

இதுகுறித்து மதுரை மாவட்டப் போலீஸ் சூப்பிரண்டெண்டு திரு. கே. வி. ஞானசம்பந்தம் அவர்கள் 6—10—70-ல் பத்திரிகை நிருபர்களிடம் கூறியதைக் கேளுங்கள்:

'மதுரையிலும் அதன் சுற்று வட்டாரத்திலும் தற்கொலைச் சாவுகள் மலிந்துவிட்டன. கடந்த 1969-ம் ஆண்டில் மாத்திரமே 551 பேர் தற்கொலை செய்துகொண்டார்கள். 'போலீசுக்கு வந்த புள்ளிவிபரப்படி மதுரையிலும் புறபகுதியிலும் மாதம் 40 பேர்வீதம் தற்கொலை செய்து கொள்ளுகிறார்கள்"—என்று கூறியிருப்பதாக 7—10—70 தினத்தந்தி செய்தி கூறியது

கணிசமான தொழில்களும் வியாபாரமும் நடக்கின்ற மதுரை நகரிலேயே இவ்வளவு தற்கொலை என்றால்— தொழில் வளர்ச்சியில்லாத பிறநகர்களிலும் தமிழ்நாடு முழுவதுமுள்ள கிராமப் பகுதிகளிலும் எத்தனை பேர் தற்கொலை செய்து மாண்டிருப்பார்கள்?

ஒரு நகரிலே 550 பேர் என்றால், தமிழ்நாடு முழுவதும் கணக்கெடுத்தால், ஆண்டுக்கு 20 அல்லது 25 ஆயிரம் பேர் தற்கொலை செய்து மாண்டிருக்கவேண்டும் அல்லவா!

### படம் காட்டாதீர்! பாடம் படிக்காதீர்!

முதல்வரே! கருணாநிதியாரே!

அடிக்கடி அழகாகச் சொல்வீர்களே, "பொற்காலத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம்" என்று —அது இதுதானா?

அண்ணா சொன்னார் என்று அடிக்கடி கூறுகின்றீர்களே, "ஏழைகளின் சிரிப்பிலே இறைவனைக் காண்பதாக!"—இந்தச் சிரிப்பிலே அந்த இறைவனைக்கண்டுவிட்டீர்களா?

வருகின்ற முதலாளிகளின் வரவேற்புக் கூட்டங்களிலெல்லாம், 'இந்தியாவிலேயே அமளிதுமளி இல்லாத அமைதியான மாநிலம்"—என்று அளப்பீரே! — அந்த அமைதியான மாநிலம் இதுதானா?

ஆம்! தற்கொலை செய்து மாண்டு போனவர்களின் வீட்டிலே குழந்தைகுட்டிகள் சத்தம் ஒன்றுமே இருக்காது. அதெல்லாம் அமைதியான வீடுகள்!

கீழ் வெண்மணியிலே 44 பேர்களை—குழந்தைகுட்டிகளை —பெண்களை கிழவர்களை—உயிரோடு ஒரே குடிசையில் நெருப்பு வைத்துச் சாம்பலாக்கியதைத் தடுக்காமல் விட்டீர்களே, அங்கும் அமைதியான காட்சிகள்தான்! நெய்வேலி......... அரவங்காடு......... திருவொற்றியூர்......... தென்காசி......... கோவை......... பூந்தாளங்குடி.........

இந்த அமைதியை நிலைநாட்டத்தானே இரும்புக்கரம் ஏந்தினீர்கள்! ஏழை உயிர் குடித்தீர்கள்! இது அமைதியான மாநிலம் அல்ல. உங்கள் போலீஸ் கொள்கையினால் அமைதிஆன மாநிலம். முதல்வரே! இப்போது புரிந்து கொண்டோம்.

# திருச்சியில் நடந்த கருணா - குருணா திருமணம்

## வ. கம்யூ. "ஜனசக்தி" யின் அன்றைய வர்ணனை

திருச்சி நகரில் நடந்தவாரம் (1970 பிப்ரவரி கடைசிவாரம்)

எழில் குலுங்கிட
மகிழ்ச்சி பொங்கிட
ஆர்வம் கொழுந்திட
குளிக்கரை பிச்சையப்பாவின்
ராதவர இசையுடன்
(முரசொலி தலைப்பு)

ஓர் திருமணம் நடந்தேறியிருக்கிறது.

மணமகள் திருவாரூர் முத்துவேலரின் அருமந்தபுத்திரன் சிரஞ்சீவி கருணாநிதி கூறுகிறார்

"நாட்டின் நன்மைகளைக் காக்க எவ்வளவோ வயதான தாடி வைத்த மணமகனை நான் திருமணம் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது"

மணமண பாக்கியவதி பஞ்சாப் குருணம்சிங் கூறுகிறார்.

'இந்த அரசியல் திருமண ஏற்பாட்டுப்படி உங்கள் மணமகனை நாள் கவர்ந்து போக மாட்டேன்''

"நான் இங்கு திருமணம் என்று கூறுவது ஆழ்ந்த அரசியலை உள்ளடக்கி இருக்கிறது என்பதை அரசியல் தட்பவெப்ப நிலையை நன்றாக உணர்ந்தவர்கள் அறிவார்கள்'' என்று கருணாநிதியே கூறியிருக்கிறார்.

என்ன அந்த தட்பவெப்ப அரசியல்?

மாநில சுயஆட்சியைக் கொள்கையை கம்யூனிஸ்ட் கட்சி, தி.மு.க. பிரிவினையை கட்டி அழுத கொண்டிருக்கும் போதே பிரகடனப்படுத்தியதே.

தமிழகத்தில் தி.மு.கவின் தோழமையோடு பணியாற்றி வரும் கம்யூனிஸ்ட் கட்சியை அழைக்காத கருணாநிதி, நட்பு கொண்டுள்ள தமிழரசுக்கழகத்தை அழைக்காத கருணாநிதி ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள அகலிதளத்தை அழைத்த மர்மம் என்ன?

தெரிந்து கொள்ள விரும்புவோரும் அறிவிப்பாரா கருணாநிதி?

"இங்குள்ள சில அரசியல் கட்சிகள் திமுக. கழகத்தின் தோழன் எனச் சொல்லிக்கொண்டு அதே சமயத்தில் தொழிலாளரைத் தூண்டிவிட்டு மறைமுகமாகத் தி.மு.க.வுக்கு தொல்லை உண்டாக்குவதாக பல பொதுக்குழு உறுப்பினர்கள் கூறினார்கள்'' மு கருணாநிதி பத்திரிகையாளரிடம்

ஆதலால் தான்—

இங்கு வந்து தொல்லை கொடுக்க முடியாத பஞ்சாப் பிராந்தியக் கட்சியை புதிய தோழனாக வரிக்கிறார்கள்.

தேர்தலுக்கு மட்டுமே தோழமை வேண்டும் மக்கள் பிரச்சினைகளை தீர்ப்பதில் தோழமை தேவையில்லை என்கிற தி. மு. க. தனித்துவ அகம்பாவம் தான் இதற்கு காரணம் என்று சொன்னால் தவறாகுமா?

அகாலிதளத்திற்கும், தி.மு.காவிற்கும் ஒத்த மனப்பான்மை இருக்கிறது என்றாரே கருணாநிதி-

தொழிலாளர்களை மதிக்காத ஆசிரியர்களை மதிக்காத பஞ்சாப் குருணாம்சிங்குக்கும் தமிழக கருணாநிதிக்கும் ஒத்த மனப்பான்மையா?

தோழன் போல நடித்து தொல்லை கொடுக்கின்றனவாம் தோழமைக் கட்சிகள்

மக்களுக்கு தொல்லை கொடுப்பதைக் கண்டும் காணாதது போல் இருந்தால்தான் தோழர்களாம்.

தி. மு. க. நண்பர்களே இது ஆபத்தான வியாக்யானம்!

'கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் கம்யூனிஸ்ட் ஆள்கிறது என்றாலும் அங்குள்ள மக்களுக்கு அந்தக் கட்சியின் மீதே நம்பிக்கை இல்லை'' என்று தி. மு க. மாநாட்டில் அன்பழகன் கூறியுள்ளார். இந்தக் கூற்றை அளவுகோல் கொண்டு அன்பழகனார் அளந்தவரா என்று அறிவிக்க வேண்டும் உபதேர்தல்களில் கிடைத்த வாக்குகளின் அடிப்படையில் அவர் நிரூபிக்கத்தயாரா?

'அண்ணா வழியை நாம் பின்பற்றுவதால் மக்களுக்கு நல்வாழ்வும் அமைதியான வாழ்வும் தருகின்ற காரணத்தால் விவசாயிகளும் தொழிலாளிகளும் தி.மு.க. ஆட்சியை ஆதரிக்கின்றனர்'' என்று அன்பழகன் கூறியுள்ளார்!

அகில இந்தியாவே தி.மு.க; ஆட்சிக் கண்டு பெருமைப்படுகிறதாம்!

தங்களுடைய ஆட்சியில் மக்களுக்கு நம்பிக்கை இருக்கிறது என்பதை நிரூபிக்கவே இதைச் சொல்லி இருக்கிறார் அன்பழகன்.

ஓ! அது தான் எவ்வளவு பெரிய மோசடி!

நல்வாழ்வாம்:
அமைதியாம்!

விவசாயத் தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளுக்காகப் போராடி வருவதையும் அந்தப் போராட்டத்தில் துப்பாக்கிச் சூட்டிற்கு ஒருவரும் படுகொலைக்கு இருவரும் உயிரோடு கொளுத்தப்பட்டதில் 44 பேர்களும் சிறைக் கொடுமைக்கு இருவரும் பலியானதைமறந்து விட்டீர்களா?

நல்வாழ்வாம்!
அமைதியாம்!

பஞ்சாலைத் தொழிலாளர்களும், கைத்தறி நெசவாளர்களும் பட்டினியும் பசியுமாக அவதிப் பட்டுக்கொண்டிருக்கின்றாரே? மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்துவிட்டார்களா?

நல்வாழ்வாம்!
அமைதியாம்!

பள்ளி ஆசிரியர்கள் பதைபதைப்போடு போராடி வருகிறார்களே மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்துவிட்டார்களா?

நல்வாழ்வாம், அமைதியாம்!

படித்து முடித்த மாணவர்கள் வேலைகேட்டு வீதிவீதியாக அலைகின்றனரே மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்துவிட்டார்களா?

நல்வாழ்வாம், அமைதியாம்!

என்.ஜி ஓ. வினர் விலைவாசிக்கேற்ப மாதம் ரூ. 30 இடைக்கால நிவாரணம், வீட்டு வாடகைப்படி, மருத்துவப்படி முதலிய கோரி போர்க்குரல் கொடுத்துள்ளனரே மறந்து விட்டீர்களா? மக்கள் மறந்து விட்டார்களா?

நல்வாழ்வாம், அமைதியாம்!

தமிழக மின்வாரியத் தொழிலாளர்கள், கணக்காயர்கள், எஞ்சினியர்கள், "விலைவாசிக்கு ஏற்றபடி பஞ்சப்படி அளிக்க கோரியும், ஊதியக் குழு பரிந்துரையை அமுலாக்கக்கோரியும் போராடி வருகிறார்களே மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்து விட்டார்களா?

நல்வாழ்வாம். அமைதியாம்!

தமிழகமெங்கும் பல்வேறு தரப்பட்ட தொழிலாளர்கள் பலநாட்களாக தொடர் போராட்டங்கள் நடத்துகிறார்களே மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்துவிட்டார்களா?

நல்வாழ்வாம், அமைதியாம்!

உணவுத்தானியக் கட்டுப்பாட்டை நீக்கம் செய்துவிட்டதால் அரிசி வாங்கிச் சாப்பிடுகிறவர்கள் அவதிப்படுகிறார்களே? மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்துவிட்டார்களா?

நல்வாழ்வாம், அமைதியாம்!

உப்பிலிருந்து புளிவரை உயர உயரப் போய்க் கொண்டேயிருப்பதால் குடும்பம் நடத்துவோர் குமுறுகின்றனரே, மறந்துவிட்டீர்களா? மக்கள் மறந்துவிட்டார்களா? நல்வாழ்வாம், அமைதியாம்!

இப்போது சொல்லுங்கள். எந்த மக்கள் நல்வாழ்வு வாழ்கின்றனர்? எந்த மக்கள் அமைதி கண்டுவிட்டனர்?

விவசாயத் தொழிலாளிகள், சிறு விவசாயிகள், பஞ்சாலைத் தொழிலாளிகள், கைத்தறி நெசவாளிகள் பள்ளியாசிரியர்கள் படித்த மாணவர்கள் என். ஜி. ஓ ஊழியர்கள் மின் ஊழியர்கள் மின்வாரியத் தொழிலாளிகள் பல்வகைத் தொழிலாளர்கள் அரிசிவாங்கி உண்போர் குடும்பம் நடத்துவோர் இவர்கள் எல்லாம் மக்கள் இல்லையா?

ஒரு வேளை திருச்சி மாநாட்டிலே திரண்டிருந்த தி. மு. க. வினர் மட்டும்தான் மக்களா? அவர்கள்தான் அமைதி கண்டு வருகின்றனர். இதையெல்லாம் எடுத்துச்சொன்னால் தொல்லையாம்...... தொல்லை!

(ஜனசக்தி 1—3—70)

## "பலர் உழைப்பார் சிலர் கொழுப்பார்"

—காஞ்சி கே. ஆர். துளசிராமன்

(சிலர் சிரிப்பார் என்ற மெட்டு)

பலர் உழைப்பார் சிலர் கொழுப்பார் - நாம்
பார்த்துக்கொண்டே இருக்கின்றோம்

சிலர் கொழுப்பார் பலர் தவிப்பார்—நாம்
பொருத்துக் கொண்டே இருக்கின்றோம் (பலர்)

டாடா பிர்லாவையும் பாரு—இதில்
டால்மியா கோயங்கா சேரு.

கோடிக் கணக்காய் குவிக்கின்றான்—கதர்
கொடியைப் பிடித்தே வருகின்றான்— (பலர்)

இருபத்திநாலாண்டு ஆட்சி—மக்கள்
ஈடேறும் வழியும் போச்சி.

இண்டியும்,... சிண்டியும்... வருகின்றான்—இன்று
இரண்டுமே ஏழ்மையை வளர்க்கின்றன் (பலர்)

அருபத்தேழில் வந்தான்—சென்னை
ஆட்சி மன்றத்தி லமர்ந்தான்.

அரவங் காட்டிலும் சுட்டுவிட்டான்—இன்னும்
அடக்கு முறைகளும் கொண்டு வந்தான்—(பலர்)

நாட்டின் முன்னேற்றம் எங்கே?—இன்னும்
நல்லவர் உழைப்பும் எங்கே?

நலிந்தவர் வாழ்வில் பலனுமில்லை—பணம்
நிறைந்தவன் நாட்டில் குறையவில்லை— (பலர்)

உழவர் உழைக்கு நாடு—அவனை
உறிஞ்சி வாழ்ந்தால் கேடு

உழு நிலம் அவனுக்கு கொடுத்துவிடு— இல்லை,
உனக்கென்ன வேலை...? ஓடிவிடு— (பலர்)

வங்கத்தில் வந்தோம் நாங்கள்—ஏழை
வர்க்கத்தை காத்தோம் நாங்கள்.

கொண்டான் கொட்டம் அடக்கி வைத்தோம்—அங்கு
குடி மக்கள் வாழ்வும் வழி அமைத்தோம்—(பலர்)

உச்சவரம்பையும் போட்டோம்—நிலம்
மிச்சமுள்ளதையும் கொடுத்தோம்

அச்சமே கொண்ட இந்திரா—மேற்கு
வங்க சபைதனையே கலைத்துவிட்டார்.

மக்களுக்காக மார்க்சிஸ்டை மக்கள்
மன்றத்திற்கே நாம் நிறுத்தியுள்ளோம்

அரிவாள் சுத்தியல் நட்சத்திரம்—கொண்ட
சின்னத்தில் உங்கள் வாக்களிப்பீர்.

# "போராட்டங்களின் போது உடனிருந்தவர்களுக்கே எங்கள் வாக்கு!"

## தபால் தந்தி ஊழியர்கள் அறிக்கை

அகில இந்திய தபால் தந்தி நிர்வாக அலுவலக ஊழியர் சங்கத்தின் (மூன்று நான்காம் பிரிவு) சார்பில் வெளியிடப்படும் 'அட்மினிஸ் டிரேடிவ் ஓர்க்கர்' என்ற ஏட்டினில் (பிப்ரவரி இதழ்) தபால் தந்தி ஊழியர்கள் யாருக்கு வாக்களிக்க வேண்டும் என்பது பற்றி வெளியான கட்டுரையை அப்படியே எடுத்துப் பிரசுரித்துள்ளோம்:-

வாக்குப் போடாமலிருப்பதால் மட்டும், நாம் வாக்குச் சீட்டுகளை வீணாக்குவதில்லை. நமக்குப் பிடிக்காத, கொள்கைகள், கட்சிகள், முதலியவைகளின் வேட்பாளர்களுக்கு, பிசாசில் குட்டிப் பிசாசு, என்று நினைத்து வாக்களிப்பதாலும் நமது வாக்குச் சீட்டுகள்வீணாகி விடும். துரதிர்ஷ்டவசமாக பெருவாரியான, வாக்காளர்கள் இந்த தர்ம சங்கடமான நிலையில் இருக்கிறார்கள். தேர்தல் என்பது நாகரீகமான பெண்கள், சோப்பு அல்லது தைலம், வாங்குவதைப் போன்ற அழகு சாதன வியாபாரம் அல்ல. வேட்பாளர்களில் நிறைய பேர், அரசியல் சடுகுடு விளையாடுவோரே; பல மா நிலங்களில்-என் தொகுதிகளில் கூட, மதம், சாதி, பணபலம், பொய்யான வாக்குறுதிகள், இவைகள் தானே தேர்தலில் நடைமுறையாயிருக்கின்றது'

யாருக்கு நாம் வாக்களிக்க வேண்டும்? பசுவும் கன்றும், ராட்டை, தீபம், அரிவாள் சுத்தியல் நட்சத்திரம் கதிர் அரிவாள், உதய சூரியன், நட்சத்திரம், சைக்கிள் இன்னும் எத்தனை—எத்தனை

இந்திரா அம்மையார், தான் பிரதமராக வருவதற்கு முன்பே, எல்லா பிற்போக்கு சக்திகளும் சோஷலிசம் வருவதற்கு தடையாக இருந்ததாகவும், அதைத் தான் மட்டுமே, நிறைவேற்றப் போவதாகவும் கூறுகிறார். பிற்போக்குச் சக்திகள் என்று அவர் கூறும் போது இயற்கையாகவே, அது, அம்மையாருடைய அருமைத் தந்தையையும் குறிக்கிறது. தான்மட்டுமே இந்தப் பிற்போக்கு சக்திகளை அழிக்க அவதார மெடுத்ததாக தன்னையே புதியவராகக் கண்டு பிடித்திருக்கிறார் அரசர்களுக்குப் பதிலாக, மந்திரிகள், குறிப்பாக பிரதம மந்திரி, அரசு நடத்த வேண்டும் என்று விரும்புகிறார்.

### நோக்கம் என்ன?

இது தான் அவர்களுடைய முதல் தேவை. மக்கள் சோஷலிசத்தை அடைவதற்கு, அவர்களுடைய நோக்கம்தான் என்ன?

பெரு முதலாளிகளின், வியாபார வேட்டைக்கு, சோஷலிசம் என்று பெயர் கொடுப்பது, அம்மையாரின் ஆட்சியில் பெரு முதலாளிகளின் வயிறு, வெடித்து விடும் அளவுக்குப் பெருத்து விங்கி விட்டது.

சமுதாய நீதியை அடைவதற்காக, அரசு, பெருமுதலாளிகள் இன்னும் அதிக வளர்ச்சி அடைய, அனுமதியளிக்கும்'' என்று,ஆகஸ்டு 13,70 ஆண்டில் அம்மையார் மேல் சபையில் அறிவித்தார்கள். ஆனால் சமுதாயத்தின் நீதி என்பதுஎன்ன?

பகுதி நேர ஊழியர்களின் ஊதியத்தில், 60 சத வீதத்தை வெட்டி எறிந்த, நிதி அமைச்சகத்தின், 68 ஆண்டு அறிக்கை சமுதாய நீதி என்னஎன்பதைக் காட்டி விட்டது. இந்த அரசு தன்னுடைய சமுதாய நீதியை எப்படி நடை முறைக்குக் கொண்டு வரப்போகிறது; நிச்சயமாக, அரசு சிப்பந்திகள் மூலமாக அல்ல? ராணுவம், போலீஸ் பாதுகாவல் படையின் மூலமாக-ஏமாற்றுக்காரர்களையும், கொள்ளைலாபக்காரர்களையும் பிடித்து கைது செய்வதன் மூலமாக அல்ல.

தனக்கு தேவைக்கான குறைந்த பட்ச ஊதியத்தை கொடு என்று லட்சோப லட்சம், அரசு ஊழியர்கள். சமுதாய நீதியை, இந்த அரசிடம் யாசிக்கிறார்களே, அவர்களுக்கு பாடம் புகட்டுவதன் மூலமாக

எப்படி அந்த மத்திய அரசு ஊழியர்களும், அவர்கள் குடும்பமும், அவர்களோடு இணைந்தவர்களும் தாங்கள் தான் இந்த அரசின், சோஷலிசச் கொள்கைகளுக்கு தடையாக இருப்பதாக ஏற்றுக் கொள்வார்கள். சோஷலிசம் என்பது தேவைக்கான குறைந்த பட்ச விஷயம் அல்ல.

இந்திரா அம்மையாரின் 'பாசன' உதவியோடு, பிர்லா டாடையில், சோஷலிசம்என்ற நிறுவனங்கள் நடைப்பட்டு வருகின்றன.

இதே போன்று வேறு சில அப்பாவிகள் இருக்கிறார்கள், அவர்களுக்கு, ஆளும் பெயரும் தான் முக்கியம்:. மொரார்ஜி தேசாய் நிதி அமைச்சராளுன, அந்த அரசு பிற்போக்கானது ஆனால் அம்மையார் நிதி அமைச்சரென்றால் அப்படியல்ல. கேரள முதல்வர், தனிச் சிறப்புடையவர்-ஏனென்றால் அவர் காங்கிரஸ் பெருவாரியாக உள்ள அரசின்: கம்யூனிஸ்டு முதல்வர். அவர், ஊழியர்களுக்கு அதிக சலுகை அளிப்பவர். அவருடைய துருப்புச் சீட்டு, மொரார்ஜியின், ஊதிய தேக்கத்தை விட மோசமான ஊதிய விடுமுறை'' அது மட்டுமல்ல. இரு சவலை விட கெட்டிக்காரத்தனமாக வேலை நிறுத்தத்தை உடைக்கக் கூடியவர். சந்தர்ப்பம் கிடைக்காமல், தன்னுடைய தகுதியை வெளிப்படுத்த முடியாமலிருந்த அவருக்கு, கேரள அரசு ஊழியர் போராட்டம் உதவி புரிந்தது.

### யார் சோஷலிஸ்ட்?

சோஷலிஸ்டுகள் என்றுகூறிக் கொள்பவர்களும் கட்சி வைத்துக் கொள்கிறார்கள். அவர்களுடைய சோஷலிசம் என்பது உடைமை வாதுகளால் முதலிடப்பட்ட வியாபாரச் சரக்கு. தனியார் துறையை வெளிப்படையாக வலியுறுத்தி வரும் சுதந்திரா கட்சி அவர்களுடன் உண்டு. அவர்கள் இருவரும் பரஸ்பர அணைப்பில் ஆனந்தம் கொள்கிறார்கள்.

இருட்டில் இருப்பவர்கள் விளக்கைத் தேடுகிறார்கள்.

தெற்கில் பிரிவினையை வலியுறுத்தி வந்தவர்கள், ஒருமைப்பாட்டைப் பற்றி பேசுகிறார்கள்.

மைசூரில் யானை பிடிக்கும் 'கெட்டா'' என்ற நிகழ்ச்சியைவிட, தேர்தல் நிகழ்ச்சி வேடிக்கையாக இருக்கிறது.

கேரளத்திலும் வங்கத்திலும் எல்லாருக்குமே, ஒரு பொதுவான திட்டம் இருக்கிறது. இண்டிகேட், சிண்டிகேட், ஜனசங்கம், கேரள காங்கிரஸ், சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி, பிரஜா சோஷலிஸ்ட் கட்சி, எல்லாரும் ஒன்று மற்ற இடங்களில் எந்த விதமான கூட்டும் சரிப்படும். ஆனால் இங்கு அப்படியில்லை. இவர்களுடைய, இருக்கும் இடமே மூடப்பட்டிருக்கிறது. ஆகையால், இவர்கள் அத்தனை பேரும் தங்களுடைய வேற்றுமைகளைக் களைந்து, சோஷலிசத்தைப் படிக்கலாம், சொல்லிக் கொடுக்கலாம் அதை எப்படி நடைமுறைப் படுத்துவது.?

கட்சிகளின் சுயநலங்களை, புரிந்துகொள்ளலாம்ஓரளவுக்கு அனுமதிக்கவும் செய்யலாம். ஆனால், வர்க்க முரண்பாடுகள்?

ஆகையால், கேரளத்திலும், வங்கத்திலும், கொள்கையை விடு, எது தனக்குச் சாதகமோ அதைச் செய்ய ஜனநாயகம் என்ற கொள்கை எதிரில் பிரிந்து செயல்படும் போது ஒற்றுமை என்பது, தாங்களும், தங்களைப் போன்ற கொள்கை உடையவர்கள், ஒன்று சேர்வது

ஆக, எல்லாரும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள். மார்க்சிஸ்டுகளைத் தனிமைப்படுத்த என்ன தூய்மையான கோட்பாடு

### இந்த துரோகிகளை நம்பலாமா?

உங்கள் வாக்குகளைக் கேட்கும், இவர்களை எப்படிப் பரிசீலிப்பது? நாம் அதைச் சுலபமாகச் செய்ய முடியும்.

அவர்கள், அத்யாவசியத் தொழில் பராமரிப்புச் சட்டம் வரும் போது, எதிர்த்து வாக்களித்தார்களா? அந்தச் சட்டத்தை அமுல்செய்ய வாக்குப் போட்டவர்களுடனும்,அதைக் கொண்டு வந்த சிண்டிகேட் கூட்டணியில் இருக்கிறார்களா? அவர்கள் அத்தனைப்பேரும், ஒரே அணியைச் சேர்ந்தவர்கள் பிரிவுபடாத காங்கிரஸ் கட்சி தான் இதற்குப் பொறுப்பு அதை ஆதரித்தவர்கள், சுதந்திராவும் காங்கிரசும் அதை எதிர்த்தவர்கள், கம்யூனிட்கட்சி, மார்க்

(4-ம் பக்கம் பார்க்க)

# பண்ருட்டியில் விறுவிறுப்பான தேர்தல் இயக்கம்!

## வாக்காளரிடையே உற்சாகம்

நெய்வேலி மார்ச். 3—பண்ருட்டி தொகுதி வேட்பாளர் தோழர் எஸ். நடராஜன் கடந்த ஒருவார காலமாக நெய்வேலி நகர வீதிகளிலும், கிராமங்கள் தோறும் நேரில்சென்று வீடுவீடாக வாக்காளர்களைச் சந்தித்து மார்க்சிஸ்ட் கட்சி வெற்றி பெற்றால் என்ன சாதிக்கமுடியும், என்ன சாதிக்க முடியாது என்பதையும் விளக்கிக்கொண்டு தனக்கு வாக்களிக்குமாறு கோரி வருகிறார். வாக்காளர்களும், தாய்மார்களும் அவர்களுக்கு நல்ல வரவேற்பளித்து வீடுதோறும் "நீங்கள் வெற்றி பெறுவது நிச்சயம்" என்று ஆசி கூறி வழியனுப்புகின்றனர்.

### மாபெரும் ஊர்வலம்

28—2—71 ஞாயிறு அன்று நெய்வேலி புதுநகரில் தொகுதி பூராவிலிருந்தும் கட்சித் தோழர்களும் அனுதாபிகளும் லாரிகளிலும். சைக்கிள்களும் ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். ஊர்வலத்தில் ஐந்து லாரிகளும் 4000 சைக்கிள்களும், 1000 பேர் கால்நடையாகவும் கலந்துகொண்டனர்—ஊர்வலத்தின் நீளம் ஒருமைல் இருந்தது. நெய்வேலி கண்டிராத ஊர்வலமாக, புதுமையாக இருந்தது. ஊர்வலம் மாலை 3 மணிக்கு தொடங்கி நெய்வேலி புதுநகர் திரு.வி.க. திடலில் இரவு 8-30க்கு வந்தடைந்தது. கூட்டத்திற்கு தோழர் டி. காசிநாதன் தலைமை வகித்தார்.

தி. மு. க. காலிகளின் கல் வீச்சால் தலையில் படுகாயமுள்ள கட்டுடன் தோழர் என். ஆர். ராமசாமி பேசினார். பின்னர் தொழிற்சங்க தலைவர் தோழர் குப்புசாமி, வேட்பாளர் தோழர் எஸ். நடராஜன் பேசியபின் தோழர் வி. பி. சிந்தன் இரவு 12 மணி வரை மார்க்ஸிஸ்ட் கட்சி தேர்தல் பிரகடனத்தை விளக்கிப் பேசினார். கடலூர் காரல் மார்க்ஸ் கலைக்குழுவினர் பாட்டுக் கச்சேரி நடைபெற்றது.

மேடைப் பிரசங்கங்களோடு நின்றுவிடாமல் வாக்காளர்கள் தேர்தல் தினமான 7—3—71 அன்று வாக்குச்சாவடிக்குச் சென்று வாக்களிக்கத்தக்க ஸ்தாபனத்தை தோழர்கள் டி. காசிநாதன். எஸ் வீரபத்திரன் பி குப்புசாமி, கே. சிவதாஸ், வி. அச்சுதன், ஜே மோஹன், சி. கே. சந்திரன் ஆகிய ஏரியா கமிட்டி தோழர்களும், மற்றும் பலரும் தேர்தல் கமிட்டிகளைப் பொறுப்பேற்று பணியாற்றுகின்றனர். பலர் வேலைக்கு விடுப்பு கொடுத்துவிட்டு. சம்பளத்தையும் இழந்து பணிபுரிகின்றனர். மாவட்ட செயற்குழு உறுப்பினர் தோழர் டி பி. கோவிந்தன் பண்ணுருட்டி நகரிலிருந்து நாற்புறமும் சென்று (நெல்லிக்குப்பம் தொகுதியுட்பட) கண்காணித்து வருகிறார்.

### கிராமங்கள் தோறும் கட்சியின் புதிய கிளைகளும் கொடியேற்றமும்

செங்கொடியைப்பற்றி இதுவரை காதால் கேட்டவர்கள, கட்சியைப்பற்றி கதையாகக் கேட்ட கிராமங்களில் தற்போது தேர்தல் பிரச்சார சூட்டோடு புதிய புதிய இடங்களில் எல்லாம் கொடியேற்றப் படுகின்றன; புதிய கட்சிக்கிளைகள் தோன்ற ஆரம்பித்துள்ளன, எதிர்க்கட்சியினர் பிரச்சாரமும் இதற்கு ஒரு காரணம். :'உங்களூரில் கட்சி ஏது, கொடியேது என்றும், அதில்லாமல் கம்யூனிஸ்ட்கள் என்று கம்யூனிஸ்ட்களே ஏற்கமாட்டார்கள்'' என்று பிரச்சாரம் செய்த பலன், கட்சிக்கிளை அமைத்து கொடியேற்றி அதிகாரப்பூர்வமாக பேசுகிறோம் இன்று கிராமங்கள் தோறும் புறப்பட்டுள்ளனர். இப்படி புதிதாக நெய்வேலிக்கடுத்த முத்தாண்டிகுப்பம், காட்டுக்கூடலூர், வெங்கடாம்பட்டு, மேலிருப்பு, கீழிருப்பு, காடாம்புலியூர், கட்டியங்குப்பம், கீழூர், மேலூர், பண்ருட்டிக்குஅடுத்த அங்கு செட்டிபாளைவம், வீரப்பெருமாநல்லூர், போன்ற பல கிராமங்களில் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கொடியும் அரசியலும் சென்றுள்ளன.

—ந.நி.

### பல்லடம் தொகுதியில்

பல்லடம், மார்ச் 2—பல்லடம் தொகுதி வேட்பாளர் ரங்கராமமூர்த்தியையும், பாராளுமன்ற வேட்பாளர் ரமணியையும் ஆதரித்து கீழ்க்கண்ட ஊர்களில் தேர்தல் பிரசாரக்கூட்டம் நடைபெற்றது. பிப். 23ல் பல்லடம் பனைப்பாளையத்திலும், பிப். 24ல் பல்லடம் தர்க்கா மைதானத்திலும், பிப் 25ல் பல்லடம் பச்சாபாளையத்திலும், மார்ச் 1-ல் பல்லடம் ஜீவா திடலிலும் கூட்டங்கள் நடைபெற்றன. இதில் உடுமலை ராமசாமி, சத்தியமூர்த்தி, பொன்னுசாமி, ஏ. கே. கோபாலன், ரமணி, ரங்காராமமூர்த்தி ஆகியோர் கலந்துகொண்டு சட்டமன்றத்திற்கு கே ரமணியையும் ஆதரித்து ஓட்டுப் போடுமாறு கேட்டுக்கொள்ளப்பட்டது முற்போக்குக் கூட்டணி பற்றியும் சிறந்த முறையில் விளக்கமாகச் சொற்பொழிவாற்றினார்கள்.

# அஜாய் முகர்ஜிக்கு சொந்தத் தொகுதியிலேயே வேட்டு!

தாம்லூக் பிப் 28.

தோழர் ஜோதிபாசுவை எதிர்த்து இண்டிகேட் சிண்டிகேட், வலது கம்யூனிஸ்ட், சுதந்தரா, ஜனசங்கம் ஆகிய கட்சிகளின் வேட்பாளராகப் போட்டியிடும் அஜாய் முகர்ஜிக்கு அவரது சொந்தத் தொகுதியிலேயே வேட்டு வைப்பதற்கான வேலைகள் விறுவிறுப்பாக நடைபெற்று வருகின்றன,

வங்க மக்களின் முதுகில் குத்தி — வங்கத்தை மத்திய ரிசர்வ் போலீசின் கையில் ஒப்படைத்த துரோகி அஜாய் முகர்ஜி பாராநகர் தொகுதியில் மட்டுமின்றி, மித்னாப்பூர் மாவட்டத்தில் தனது பழைய தொகுதியான தாம்லூக்கிலும் போட்டியிடுகிறார். இவர் 1962- முதல் அந்த தாம்லூக் தொகுதியில் போட்டியிடுகிறார்

இப்போது அந்தத் தொகுதியிலும் அவர் படுதோல்வியடைவதற்கான வேலைகள் தீவிரமாக நடக்கின்றன.

மார்ச் 1 அன்று தாம்லூக் தொகுதியில் பிரம்மாண்டமானதோர் ஊர்வலத்தை நமது தோழர்கள் நடத்தினர்! இதற்கு முன்பு வேறெந்தக் கட்சியும் இவ்வளவு பிரம்மாண்டமான ஊர்வலத்தை இத்தொகுதியில் நடத்தியதே இல்லை!

பல்லாயிரக்கணக்கான பேர் கலந்து கொண்ட இந்த ஊர்வலத்தைக் கண்டு பங்களா காங்கிரஸ் தலைவர்கள் நடுங்கத் தொடங்கி விட்டனர்! உள்ளதும் பறிபோய் விடுமோ என்ற அச்சம் அவர்களைப் பிடித்துக் கொண்டது!

இந்த ஊர்வலத்தில் ஏழை விவசாயிகள், விவசாயித் தொழிலாளர்கள், ரயில்வே ஊழியர்கள், மத்தியதர வர்க்கத்தினர், பெண்கள், இளைஞர்கள், மாதர்கள் ஆகியோர் முன்னெப்போதும் கண்டிராத அளவிற்கு உற்சாகத்தோடு கலந்து கொண்டனர்!

பாராநகர் தொகுதியில் வாலை நீட்டி இருக்கும் அஜாய் முகர்ஜியின் வால்அங்கே ஒட்ட நறுக்கப்படுவதுடன் தாம்லூக் தொகுதியிதும் பாடம் புகட்டப்படும் என்பதைத் தான் இந்த ஊர்வலம் பறை சாற்றியது.

ஊர்வலத்தின் முடிவில்நடைபெற்ற பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் தோழர் அரிகிருஷ்ண கோனார் உரையாற்றினார்,

அஜாய்முகர்ஜியின்துரோகத்தை ஒன்றின் பின் ஒன்றாக தோழர் அரிகிருஷ்ணன் அம்பலப்படுத்தினர்.

துரோகிகளுக்குப்பாடம்புகட்டுவதையேகுறியாகக்கொண்ட மித்னாப்பூர் மாவட்டம், அதிலும் தாம்லூக் தொகுதி நிச்சயமாக இந்தத் துரோகியையும் வீழ்த்தத்தான் போகிறது. அதற்கு இந்த ஊர்வலமும் கூட்டமுமே அத்தாட்சி'' என்று தோழர் அரிகிருஷ்ணக் கோனார் கூறியபோது கூட்டமே அலை கடலென ஆர்ப்பரித்தது!

அதே சமயத்தில் பாராநகர் தொகுதியில் ஒரு பொதுக்கூட்டத்தில் அஜாய் முகர்ஜி பேசும் போது நூறு 'மகா' ஜனங்கள் அவரை வேடிக்கை பார்க்க வந்திருந்தனர்!

ஆனால் அஜாய் முகர்ஜியின் கூட்டத்திற்கு முதல் நாள் அர்தம் பகுதியில் தோழர் ஜோதிபாசுவை ஆதரித்து 30 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர்'' ஊர்வலம் ஒன்றினை நடத்தினர் இந்தஊர்வலத்தில் பல்லாயிரக்கணக்கான பெண்கள் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது.

''வங்கமக்களின் துரோகி அஜாய் முகர்ஜியின் வால் பாராநகரில் நறுக்கப்படும் என்பதை இந்தப் பிரம்மாண்டமான ஊர்வலம் பறை சாற்றியது.

# கண்ணோட்டம்

## எலுமிச்சம் பழத்துக்கு புளியம்பழம் நீளம் புளிப்பிலே அதுக்கு அப்பன்!

சிண்டிகேட்டும் தி மு. க. வும் இந்தத் தேர்தலிலே தமிழகத்துப் பொதுமக்களின் மண்டைகளை எவ்வளவு குழப்ப முடியுமோ, அவ்வளவும் குழப்பி விட்டன.

போன தேர்தலிலாவது, 'காங்கிரஸ் கட்சி ஆட்சிக்கு வந்தால் என்னென்ன சாதிப்போம்?''—என்று வாக்குறுதி பட்டியலை வெளியிட்டது.

அதுபோல, தி மு. க. வும் ''நாங்கள் ஆட்சிக்கு வந்தால், ரூபாய்க்கு படி அரிசி போடுவோம்? விலைவாசிகளை இறக்குவோம்! வேலை வாய்ப்புகளை அதிகரிப்போம்! காங்கிரஸின் நில உச்சவரம்புச் சட்டத்திலுள்ள ஓட்டைகளை அடைத்து, உழுபவனுக்கு நிலமும் பணமும் கிடைத்திட தக்கவாறு சீர்திருத்தம் செய்வோம்! உள்ள வேலைகளை கெடுத்திடக்கூடிய நவீன இயந்திரங்களைப் புகுத்த மாட்டோம்! அடக்குமுறை இல்லாமல்—ஊழல்கள் இல்லாமல்—நல்லாட்சி நடத்திடுவோம்''.........இப்படியாக எத்தனையோ வாக்குறுதிகளைக் கூறி மக்களின் வாக்குகளைக் கேட்டார்கள்.

அதெல்லாம் போன தேர்தல்! இந்தத் தேர்தலில் என்ன பார்க்கிறோம்?

வாக்குறுதிகள் கொடுத்தால் வம்பிலே மாட்டிக் கொள்ள வேண்டியிருக்கும் என்று, காமராசரும் கருணாநிதியும் கூடிப்பேசி செய்வது போல, எரிந்த கட்சி, எரியாத கட்சி லாவணிபாட ஆரம்பித்து விட்டார்கள்.

தேர்தல் முடிந்து, ஆட்சியில் அமரும் கட்சியிடம், மக்கள் தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தினால் வரி உயர்வை எதிர்த்தால்—விலைவாசி உயர்வை எதிர்த்தால்—கட்டண உயர்வை எதிர்த்தால்—வேலை கொடு! சோறு போடு!—என்று ஆர்ப்பாட்டம் செய்தால்—சம்பள உயர்வு கேட்டால்—உழவர்கள் நிலம் கேட்டால்—கடன் நிவாரணம் கோரினால்—கல்விச் சலுகைகள் கேட்டால்—அப்போது ஆளும் கட்சி கூறும், ''தேர்தல் சமயத்திலே நீங்கள் கேட்கிற கோரிக்கைகளையெல்லாம் கொடுப்போம் என்று உங்களிடம் ஓட்டுக் கேட்டோம்?''—என்று.

அதனால் பிடிகொடாமல்—மக்களின் வாழ்வை உலுக்கிக் கொண்டிருக்கும் பிரச்னைகளைப் பற்றிப் பேசாமல்—சம்பந்தா சம்பந்தமில்லாத—அனாவசியமான—அசிங்கமான—விவகாரங்களையெல்லாம் இழுத்துப் போட்டு முடுக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

### புழுதிப் புயல் அரசியல்

1. சேலத்தில் நடந்த திராவிடர் கழக மாநாடு நிகழ்ச்சிகள்.

2. துக்ளக் இதழ் பறிமுதல் விவகாரம்''

3. முன்னாள்மந்திரிகளும் இந்நாள்மாண்புகளும் வீடுகள் வாங்கியது—கார்கள் வாங்கியது—நிலங்கள் வாங்கியது—லஞ்சம் வாங்கியது—வெளிநாடுகளில் சுற்றுப்பயணம் செய்தது—மாறி மாறி மந்திரிகள் வீட்டில் திருமணங்கள் நடத்தி மொய்முறை வாரிக் கட்டியது—அப்புறம் நடிகர் திலகம் மக்கள் திலகங்களின் நடிப்பு போட்டி—படங்களின் நீளம்—எத்தனை நாள் ஓட்டம்—பாக்ஸ் கலெக்ஷன் யாருக்கு அதிகம்—தமிழ் மண்ணிலே பிறந்த திலகம் எது—வேறு மாநிலத்திலிருந்து பிழைக்க வந்த திலகம் எது?—ஆகஸ்ட் சீமையிலே படம் எடுத்த போது அன்னிய நாணயச் செலவாணி ஊழல்—மது பெர்மிட் நம்பர் என்ன?—அது போல மக்கள் திலகத்தின் மனைவியின் வரலாறு—சேலத்தில் திருமுருகனுக்கும் ஸ்ரீராமச்சந்திரனுக்கும் பெரியார் பூசை செய்ததைத் தொடர்ந்து எழுப்பிவிட்ட சண்டிகேட் புயல்—அதில் கலகலத்துப் போன தி மு. க. தலைவர்கள், கடைந்தெடுத்த சநாதனிகளும் மைதீக குடுக்கைகளிடமும் போய் வாங்கி வெளியிட்ட சான்றிதழ்கள்—நாங்களா நாத்திகர்கள்?—22 வருடமாக ஓடாத தேரை இழுத்து விட்டவர்கள் நாங்கள்—அங்காளம்மன் கோவிலுக்குப் பொங்கல் வைத்தவர்கள் நாங்கள்—குருவாயூரப்பன் கோவிலுக்கு குண்டுச்சப்பா அனுப்பினவர்கள் நாங்கள்—சீரங்கநாதன் கோயிலுக்கு திருப்பணி நடத்த ஐ.நா. சபை வரையிலும் அலைபோதினவர்கள் நாங்கள்—மைலாப்பூர் கபாலி குளத்திலே மணலெடுத்தவர்கள் நாங்கள்—மாரியாத்தா கோவிலுக்கு மாவிளக்குப் போட்டவர்கள் நாங்கள் திருப்பழனிக்கும் திருப்பதி சாமிக்கும் திருமொட்டை போட்டவர்கள் நாங்கள்—ஏ, அப்பா.........அது நாங்கள், இது நாங்கள் அத்தனையும் நாங்கள்.........என்று திருவாரூர் தேர்ப்படத்தோடு சுவரொட்டி போட்ட பிரச்சாரம்!

அப்புறம் ராட்டைப்பெண்ணு படத்துக்கு மேலாடை இல்லையே! இதுதானா தமிழர் பண்பாடு?—என்று கருணாநிதி கேட்க—'நீ உருவாக்கிய காவேரி மாதா சிலைக்கு கச்சைதானே இருக்கிறது. மேலாடை இல்லையே! இது தமிழர் பண்பாடா?''—என்று சிண்டிகேட் கேட்டு சுவரொட்டிகள் விட............

இப்போது, மாண்புமிகு தி மு. க. அமைச்சர்கள் ஒவ்வொருவரும் வாங்கிய பங்களாக்கள், வீடுகள் படத்துடன் சிண்டிகேட் சுவரொட்டிகள் போட—அதற்கு மறுப்பாக:

'சேலை நடுவே சேஷலிசத் தந்தை.

ஏழை பங்காளர் காமராசர் வசிக்கின்ற எட்டடிக் குடிசை இதுதான்! இந்த பங்களா யாருக்கு சொந்தம்? என்ன வாடகை? ரசீது காட்ட முடியுமா? உண்மையைச் சொன்னால் ஊர் சிரிக்கும்'' என்று சுவரொட்டி போட்டு அதில் காமராசர் சென்னையில் வசிக்கும் வீட்டின் போட்டோவையும் போட்டு பிரச்சாரம் நடக்கிறது. அதற்கு மறுப்பாக, காமராசர் சென்னைக்கு வந்த அன்னைக்கிருந்து இன்னைக்கி வரையும் அவர் வசிக்கிற வீடு வாடகை வீடு தான்'' காமராசர் தரப்பில் அறிக்கை விடப்படுகிறது. பார்த்தீர்களா வாக்காளப் பெருமக்களே! இவர்கள் இருவரும் பெரிய கட்சிகளின் தலைவர்கள். அரச கட்டிலில் அமர்ந்தவர்கள்! அதனை எட்டிப் பிடிக்க எகிறிக் கொண்டு நிற்பவர்கள்.

இவர்கள் கிளப்பிவிடும் புழுதிப்புயலைப் பார்த்தீர்களா? அதன் வர்க்க அரசியலைப் புரிந்து கொண்டீர்களா?

### கூடிப்பேசு குழப்படி செய்கிறார்கள்

மக்களின் ஜீவாதாரப் பிரச்சனைகளான வேலையில்லாத் திண்டாட்டத்தையும், விலைவாசி உயர்வையும் கட்டுப்படுத்த இருவரிடமும் உள்ள மாற்றுத் திட்டங்கள் என்ன என்பதில 'சண்டை' போட இருவரிடமும் சரக்கு இல்லை! எல்லாம் மக்களை திசைதிருப்பு குழாயடி ஏசல்களே! மக்களை பற்றி இவர்களுக்கு ரொம்ப ரொம்பக் கவலை.

எல்லாம் கூடிப் பேசிக் கொண்டு குடுமிபிடிச் சண்டை போடுகிறார்கள்! நிழல் சண்டை இதிலே போட்டா போட்டி காட்டா குஸ்தி மிக மிக பயங்கரமாக நடக்கிறது

எலுமிச்சம் பழத்துக்கு புளியம்பழம் நீளம்! புளிப்பிலே அதுக்கு அப்பன்!

ரெண்டும் ரெண்டும் ஆப்பை!
ரெண்டும் கழன்ற ஆப்பை!
விட்டுத்தள்ளு!

---

மதுரையில்

## தேர்தல் பேரணி

நாள்: 4—3—71 வியாழக்கிழமை

காலம்: மாலை 4 மணி

இடம்: செல்லூர் களத்துப்பொட்டலில் இருந்து ஊர்வலம் சில முக்கிய வீதிகளின் வழியாக சென்று கடலழகர்பெருமாள் கோவில் முன் பொதுக்கூட்டம் நடைபெறும் இடத்தை வந்தடையும்.

நாடாளுமன்றத்தொகுதி வேட்பாளர்

தோழர் பி. ராமமூர்த்தி

திரு. ஏ. எம். யூசப் (தமிழ்நாடு முஸ்லீம் லீக் தலைவர்)

மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளர்கள்

தோழர்கள் என். சங்கரய்யா

வி. கார்மேகம்

கே. பி. ஜானகி அம்மாள்

வி. வீரபத்திரன்

ஆகியோர் பேசுவார்கள்.

அனைவரும் வருக.

---

## வலது கம்யூனிஸ்டுகள் அன்றும் இன்றும்

**அன்று**

'இந்திரா காங்கிரசுடனோ அதன் அரசாங்கத்துடனோ ஐக்கிய முன்னணிக்குப் பிரச்னையே எழவில்லை''

—வலது கம்யூனிஸ்டு தலைவர் சர்தேசாய் (செக் நாட்டிலிருந்து வெளிவரும் சுதந்திரம், சமாதானம். சோஷலிசம் என்ற ஏட்டின் 1970 ஜூலை இதழில்)

**இன்று**

'செங்கற்பட்டிலிருந்து செல்லும் ஓ. வி அளகேசனை விட நெல்லையிலிருந்துசெல்லும்முருகானந்தம்இந்திராவை உறுதியாக ஆதரிப்பார்.

— வலது கம்யூனிஸ்ட் வேட்பாளர் எஸ். ஏ. முருகானந்தம் (தினமலர் 30—1—71 இதழில் காண்க)

**அன்று**

நிலப் போராட்டத்தின்போது ''காலில் மிதித்தால் தலையில் மிதிப்போம்''

— கருணாநிதியை எச்சரித்து எம். கல்யாணசுந்தரம் பேசியது (எல்லாபத்திரிகைகளிலும் வெளியானது)

**இன்று**

''தமிழகத்து வீரன் அமரன் அண்ணா''

— ஏ. எஸ். கே. ஐயங்கார் (முரசொலி 6—2—71ல் வெளியான பேச்சில்

---

## அன்னை லெட்சுமி அம்மாள் நினைவு தினம்

நம் நாட்டு வரலாற்றில் சிறைக்குள் உண்ணாவிரதமிருந்து உயிர்த் தியாகம் செய்த 'முதல் பெண்மணி' அன்னை லெட்சுமியின் பாப்பா உமாநாத் அன்னையார் மறைந்த நாள் மார்ச்-4.

உழைக்கும் மக்களின் உரிமைப் போரில் சிறை சென்று சிறைக் கொடுமைகளை எதிர்த்து 23 தினங்கள் உண்ணாவிரதமிருந்து தனது இன்னுயிரை அர்ப்பணித்த செம்மலராம் அன்னை லெட்சுமி-கம்யூனிஸ்ட் கட்சிக்கும், உழைக்கும் மக்களுக்கும், பெண் குலத்திற்கும் மங்காப் புகழ் தேடித் தந்தவராவார்!

''லெட்சுமி என்ற பெயரானது தலைமறைவு வாழ்க்கையின் போது வைக்கப்பட்ட புனைப் பெயராகும்; இவரது உண்மைப் பெயர் அலமேலு அம்மையார்!

1946-ல் ரயில்வேத் தொழிலாளிகளின் போராட்டத்தின் போது-144 தடை உத்திரவை மீறி 1 மாதம் சிறை சென்றார்!

பிறகு மீண்டும்-1950 பிப்ரவரி 6-ம் தேதி கைது செய்யப்பட்டார்! சிறைக்குள் கம்யூனிஸ்டுகள் மிருகத்தனமாக தாக்கப்பட்டதை எதிர்த்து பிப்ரவரி 11-ம் தேதி உண்ணாவிரதம் தொடங்கினார்! 23-வது நாள் விடியற் காலை 4 மணிக்கு அன்னை லெட்சுமி வீர மரணமடைந்தார்!

சாதாரண தொழிலாளர் குடும்பத்தில் பிறந்து வறுமையில் வாழ்ந்து, கம்யூனிஸ்ட் கட்சியின் சீரிய லட்சியத்துக்காக தன்னையே அர்ப்பணித்த அன்னையின் தியாகம் என்றென்றும் நமக்கு ஆதர்சனமாக இருந்து வழி காட்டுமாக!

---

## தி. மு. க. வெற்றிக்கு வலது கம்யூனிஸ்டுகள் வேலைசெய்யவில்லை!

மதுரை, மார்ச். 3—இராமநாதபுரம் மாவட்டத்தில் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு இராஜபாளையம் தொகுதி மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. இந்த மாவட்டத்தில் வலது கம்யூனிஸ்ட்கள் 10 இடங்களிலாவது போட்டியிட வேண்டுமென்று விரும்பி, அதற்காகவே 'நிலப்பறி'' இயக்கமெல்லாம் நடத்தி, பறிகொடுத்து வந்தார்கள்.

ஆனால் கூட்டணியில் ஒரு தொகுதி மட்டுமே கிடைத்தது. அதாவது ஏ. எஸ். கே. அய்யங்கார் பாஷையில்சொல்லப்போனால் வலது கம்யூனிஸ்ட் ஏந்தி நின்ற சட்டியில இங்கு ஒரு தொகுதிதான் 'பிச்சையாக விழுந்தது' அதை மட்டுமே ஏற்றுக்கொள்ளும்படியான இக்கட்டான நிலையும் வலது கம்யூனிஸ்ட் தலைமைக்கு ஏற்பட்டது!

இதனால் ஆத்திரமும் கோபமும் அடைந்த வலது கம்யூனிஸ்ட் மாவட்டத் தலைவர்களும். பேச்சாளர்களும், ஊழியர்களும், கூட்டணிக்குள் எடுத்துக்கொண்ட சத்தியத்தை மீறி—அதாவது கூட்டணியில் உள்ள கட்சிகளின் வெற்றிக்கு பரஸ்பரம் பாடுபடுவோம்—என்ற சத்தியத்தைக் காற்றிலே பறக்கவிட்டு, எல்லோரும் மதுரை மேற்குத் தொகுதியில் போட்டியிடும் வலது கம்யூனிஸ்ட் வேட்பாளர் கே. டி. கே. தங்கமணிக்கு வேலை செய்ய மதுரைக்கு வந்துவிட்டார்கள்.

சிங்கம்புணரியில் தி. மு. க. மந்திரி மாதவனுக்கு வேலை செய்ய வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் இல்லை. அப்படி ஏறக்குறைய இந்த மாவட்டம் முழுவதுமே தி. மு. க வுக்கு வாய்ப்புக்குத்தான் ஆதரவு தருகிறார்களே தவிர உண்மையான ஆதரவு தரவில்லை.

இதை அறிந்து வெறுப்பும் திகைப்பும் ஆத்திரமும் அடைந்த மதுரை நகர் தி மு. க. ஊழியர்கள், ''வலது கம்யூனிஸ்டுகள் நமது வெற்றிக்குப் பாடுபடாவிட்டால், நாம் ஏன் அவர்களுக்குப் பாடுபட வேண்டும் அடுத்துக் கெடுக்கும் துரோகிகள் என்று திட்டிக்கொண்டு தி. மு. க போட்டியிடும் தொகுதிகளுக்குப் போய் வேலை செய்து வருகிறார்கள்.

---

## யூனியன் முஸ்லிம்லீகிலிருந்து விலகல்

திண்டுக்கல் மார்ச் 2;

திண்டுக்கல் திரு. எம். சுல்தான் மைதீன் அவர்கள் அறிவிப்பதாவது:

இந்திய யூனியன் முஸ்லீம் லீக்கின் தமிழ் மாநில கிளையின் திண்டுக்கல் உட்கிளையின் செயலாளர் பொறுப்பு (பதவி) 0-12 காசு உறுப்பினர் பொறுப்பு இவைகளில் இருந்து ''விலகி'' விடுகிறேன் என்பதை திண்டுக்கல் செயலாளருக்கு கடிதம் எழுதியுள்ளேன் என்பதை நான (எம். சுல்தான் மைதீன்) அறிவிக்கிறேன்:

### காரணங்கள்.

1. நாவலரும் மறுமலர்ச்சி ஆசிரியருமாகிய ஏ. எப். யூசுப் முன்னால் மேயரும் முன்னாள் சட்டமன்ற முஸ்லீம் லீக் கட்சித்தலைவருமான இந்நாள் துறைமுக தொகுதி தமிழ் நாடு முஸ்லீம் லீக் கட்சி வேட்பாளருமான ஜனாப் அபிபுல்லாபேக் எம். பி. பி. எஸ். முழக்கம் ஆசிரியரும் மேலப்பாளையம் தொகுதிசட்டமன்ற உறுப்பினருமான ஜனாப் சேகு தம்பி சேலம் தியாகி ஜனாப் அப்துல் பாசித் போன்ற உத்தம ஊழியர்களை இ. யூ. முஸ்லீம் லீகில் இருந்து அநியாயமாக நீக்கியது.

2. ஒரு தலை பட்சமாய் பதவிகளை 'தனக்கு' வேண்டியவர்களுக்கு வழங்கியது (தி. மு. க.). இ. யூ. மு; லீக் உடன்பாடு காரணமாக இ. யூ. மு. லீக்கிற்கு கிடைத்த எம். எல். சி. எம். பி (மேல் சபை) பதவிகளை வழங்கியது

3. அதே போக்கில் பிறைமரிகள் (கிளை) ''திடீர்'' என்று பதவி மோகத்துடன் வரும் எத்தர்களுக்கு கட்சியில்முக்கிய பொறுப்பு அளிப்பது (நகர் மன்ற உறுப்பினர் பதவி) எனவே இது போன்ற தவறான முறைகேடான போக்கை—தொடர்ந்து தொடர் கதையாக வரும் போக்கை பார்த்து வெறுத்து இ. யூ. மு. லீகில் இருந்து 'விலகி'' தமிழ் மாநில முஸ்லீம்களின் உரிமைக் குரலாய் முழங்கி மறுமலர்ச்சி காணும் தமிழ் நாடு முஸ்லீம் லீகில் சேர மனுச் செய்துள்ளேன் என்பதை, நான் (எம். சுல்தான் மைதீன்) அறிவிக்கிறேன்.

---

## தோழர் என். ஆர். ராமசாமியின் ......

(1ஆம் பக்கத் தொடர்ச்சி)

யில் அதாவது பண்ருட்டி தொகுதியில் சேர்த்தார். ஆனால் தான் செய்தது தனக்கே எமனாக வருவதைக் கண்ட தி. மு. க. வினர் மார்க்சிஸ்டுகள் மீது அடிதடிகளைத் தொடுத்துள்ளனர்.

### மாவட்ட விவசாய சங்கத் தலைவர் தாக்கப்பட்டார்

தொகுதிகளில் போடும் பொதுக் கூட்டங்கள் போலவே கடந்த பிப் 27, அன்று தெற்கு மேலூர் என்ற கிராமத்தில் பொது கூட்டமும் அதன் பின் இன்னிசை கலா நிகழ்ச்சியும் நடந்தது கலா நிகழ்ச்சியின் நடுவில் தி மு. க. குண்டர்கள் தனது கிண்டல் வேலையைச் செய்தனர். ஆனால் மக்கள் அதை சமாளித்தனர்.

ஆனால் இன்னிசை முடிந்த பிறகு தி. மு க. காலிகள் கற்களைக் கொண்டு மேடை மீது அடித்தனர். அப்போது அங்கிருந்த, தெ. ஆற்காடு மாவட்ட வி. சா. சங்க தலைவர் தோழர் என். ஆர். ராமசாமி மண்டையில் பலமாக அடிபட்டு செங்குருதி சொட்ட சொட்ட அங்கேயே மயங்கி விழுந்தார். பின்னர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்.

### கருணாநிதியாரே கூறியதை மறந்துவிட்டீரா?

1971 பிப்ரவரி 3 ஆம் நாள் திருவல்லிக்கேணி தேர்தல் கூட்டத்தில் கழகத் தலைவர் கருணாநிதி கூறுகிறார்.

''எங்களது தொண்டர்களை தாக்கியது போதும் எங்கள் தோழர்களின் உயிரைக் குடித்தது போதும் எங்கள் தலைவர்களின் இரத்தத்தைக் குடித்தது போதும், உயிர் போனாலும் வன்முறையில் இறங்க மாட்டோம்.

(முரசொலி 3—2—71)

கருணாநிதியாரே! மாதத் தொடக்கத்தில் கூறியதை அதற்குள் மறந்து விட்டீர்களா? உங்களது இரத்த வெறி இன்னுமா குறையவில்லை.

இதற்கு மக்கள் தகுந்த தண்டனை அளிக்காமல் விடமாட்டார்கள்.

---

## மார்க்சிஸ்ட் கட்சி......

1-ம் பக்க தொடர்ச்சி

கூட்டாட்சி தன்மை வேகமாக சீர்குலைக்கப்பட்டு வருவதைக் காணலாம். மாநிலங்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்கூட ஆக்கிரமிக்கப்பட்டு வருகின்றது. இது மாநில மத்திய அரசுகளுக்கிடையே முரண்பாட்டினை தீவிரப்படுத்துவது இயற்கையே! பல்வேறு மொழி பேசுவோர் கொண்ட நமது நாட்டைப் போன்ற ஒரு நாட்டில்— மத்திய அரசிற்கு எதிராக மாநில அரசுகளுக்கே தீர்மானிக்கும் அதிகாரம் வேண்டும்.

எனவே— மத்தியிலே அதிகாரம் குவிந்து கிடப்பதற்குப் பதிலாக— மாநிலங்களுக்கு அதிகாரம் கிடைப்பதற்காக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போராடும்; அதற்காகப் போராடுவதற்காக உண்மையான ஜனநாயகக் கட்சிகளையும், குழுக்களையும், தனி மனிதர்களையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவி அழைக்கின்றது

### மார்க்சிஸ்ட் கட்சி கோருவதாவது

1) கவர்னர் பதவியையும் மாநிலங்களில் ஜனாதிபதி ஆட்சியையும் ஒழிக்கவேண்டும்.

2) மாநிலங்களுக்கு உண்மையான அதிகாரம் கிடைக்கும் வகையில்— மத்திய மாநில அரசுகளின் அதிகாரங்களும் பணிகளும திருத்தி அமைக்கப்படவேண்டும.

3) இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் ஏழாவது அட்டவணையில உள்ள கூட்டுப்பட்டியலில் உள்ளவற்றில் பெரும்பாலானவை மாநிலங்களுக்கு மாற்றித்தரப்படவேண்டும்.

4) மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம்; மத்தியில் வசூலிக்கப்படும் வரிகளில் 75 சதவிகிதம் மாநில அரசுகளுக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

5) அகில இந்திய சர்வீஸ் ஊழியர்களான ஐ. ஏ. எஸ். ஐ. பி. எஸ். அதிகாரிகள் உட்பட அனைத்து ஊழியர்களும் முழுமையாக கட்டுப்படுத்தும் அதிகாரம் மாநில அரசுகளுக்கு இருக்கவேண்டும்,

இத்தகைய அரசியல், பொருளாதார அரசியல் சட்ட சீர்திருத்த துறைகளில் மட்டுமின்றி பின்வரும் கோரிக்கைகளுக்கும் போராட உண்மை ஜனநாயகக் கட்சிகளையும், குழுக்களையும், தனி மனிதர்களையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி அறை கூவி அழைக்கின்றது.

### ஏகாதிபத்தி எதிர்ப்பு

1) வியட்நாம், லாவோஸ், கம்போடியா, கொரியா, மேற்கு ஆசியா, ஜெர்மனி, கியூபா, ஆகிய நாடுகளையும் பொறுத்தமட்டில் ஏகாதிபத்திய கொள்கையை (குறிப்பாக அமெரிக்காவின்) எதிர்த்து உறுதியான போராட்டம் என்ற ஒரு கொள்கையை எடுக்க வேண்டும், வியட்நாம், கொரியா, கிழக்கு ஜெர்மனி ஆகிய நாடுகளை இந்திய அரசு அங்கீகரிக்க வேணடும், இந்நாடுகளுக்கும் இந்தியாவிற்கும் இடையே தூதுவர் உறவினை ஏற்படுத்த வேண்டும். தென் வியட்நாம் புரட்சி அரசாங்கத்தினை அங்கீகரிக்க வேண்டும். தென்னாப்பிரிக்காவிலும், தென்ரொடேசியாவிலும் வெள்ளை இனவெறி அரசுகளை எதிர்த்துப் போராடும் ஆப்பிரிக்கர்களுக்கு முழு ஆதரவினையும் தெரிவிக்க வேண்டும். அங்கோலா, மொசாம்பிக், கினிய பீசிபோன்றநாடுகளில் போர்ச்சுகீசிய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள அந்நாட்டு மக்களுக்கு முழு ஆதரவினையும் தெரிவிக்க வேண்டும். அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் பக்கபலத்துடன் இஸ்ரேல் அரசாங்கம் செய்துள்ள ஆக்ரமிப்பை எதிர்த்துப் போராடும் அராபிய மக்களுடன் முழுமையாக ஒன்றுபட்டு நிற்கவேண்டும்.

### போராடும்நாடுகளுக்கு ஆதரவு!

2) அனைத்து ஏகாதிபத்திய எதிர்ப்பு நாடுகளுடனும் ஒன்றுபட்டு நின்று- அதிலும் குறிப்பாக ஆசிய, ஆப்பிரிக்க ஏகாதிபத்திய நாடுகளுடன் ஒன்றுபட்டு புதிதாக விடுதலை பெற்ற நாடுகளின் இராணுவ விஷயங்களிலும், அரசியல், பொருளாதார, கலாச்சாரத் துறைகளிலும் அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் போன்ற ஏகாதிபத்திய வல்லரசுகள் தலையிடுவதை எதிர்த்து—ஒரு பொதுவான போராட்டத்தை நடத்துவதற்கு புதிய நடவடிக்கைகளை இந்திய அரசு மேற்கொள்ள வேண்டும.

### உறவுக் கொள்கை!

3) மக்கள் சீனத்துடனும். பாகிஸ்தானுடனும் அமைதியை நிலைநாட்டி—நல்லுறவு கொள்வதற்கு தேவையான துணிகர நடவடிக்கைகளை இந்திய அரசு மேற்கொள்ள வேண வேண்டும்.

4) நமதுநாட்டின் சமுதாய கலாச்சார வாழ்வில் தலையிட அந்நிய நாடுகளுக்கு வழி கோலும் விதிகளை நீக்கும் வகையில்— அயல்நாடுகளுடன் செய்து கொண்டுள்ள கலாச்சார ஒப்பந்தங்களையும் திருத்தி அமைக்க வேண்டும்.

இந்த உடனடித் திட்டங்களை அமுல்படுத்தாமல்—நாட்டினை இன்று எதிர்கொண்டுள்ள நெருக்கடியிலிருந்து காப்பாற்ற முடியாது!

எனவே- இக்கொள்கைகளுக்காக நாடாளுமன்றத்திலும், சட்ட மன்றத்திலும் தொடர்ந்து போராட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளர்களுக்கு அரிவாள் சுத்தியல் நட்சத்திர சின்னத்தில் வாக்களியுங்கள்[

---

## போராட்டங்களின் போது......

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

ஸிஸ்ட் கட்சி, சம்.சோஷலிஸ்ட் பிரஜா சோஷலிஸ்ட், தி.மு.க ஆகியவைகள். ஆனால், அவர்கள் இப்போது எங்கு இருக்கிறார்கள்? காங்கிரஸ் கட்சியின் இரண்டு பிரிவுகளுக்கும், பாதாங்கு சமதயாக இருக்கிறார்கள.

மத்திய அரசு ஊழியர்கள், பாதன்கோட்டில், ரயில்வே தொழிலாளர்கள் சுட்டுக் கொல்லப்பட்டதை, மன்னிக்க முடியுமா? பல்லாயிரக்கணக்கான ஊழியர்கள், வேலையைக் கேற்ற குறைந்தபட்ச ஊதியத்தைக் கேட்ட பாவத்துற்காக, பழிவாங்கப்படவில்லையா? நமது ஊழியர்களைக் கொன்றவர்களும், தொழியர்களிடம், தகாதமுறையில் நடந்தவர்களும், ஆளும் கட்சிக்கு வாலபிடிக்கும் போது நாம் அவர்களை நம்பமுடியுமா.? இவர்களைத் தவிர நமக்கு விதிவிலக்கே இல்லையா?

### நமக்கு ஆதரவு அளித்த முதல்வர்

சவானின் போலீஸ் நடவடிக்கையை எதிர்த்துக் குரலெடுத்த அரசு ஊழியர்களின் வேலை நிறுத்தத்தை ஒடுக்க மாட்டேன் என்று குரல் கொடுத்தார் கேரள முதல்வர் இ. எம். எஸ்.

நாம் நமது கஷ்டமான நாட்களில் நம்முடன் இருந்தவர்களோடு இப்போது நிற்க வேண்டாமா? லட்சக்கணக்கான ஊழியர்களின் மீது அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டவர்களோடு உறவு கொண்டவர்களை அவர்கள் எவ்வளவுதான் நம்மோடு சேர்ந்து நின்றார்கள் என்றாலும் எப்படி நம்புவது? அவர்கள் தங்கள் வர்த்தையை மாற்றலாம். ஆனால் நாம் பச்சோந்திகளாக மாற முடியாது. நமது உடம்பில் இருக்கும் தழும்புகள் நம்மை காயப்படுத்தியவர்களை நமக்கு ஞாபகப் படுத்துகிறது. நம்மீது புரிந்த குற்றங்களை மறந்து குற்றம் புரிந்தவர்களையும் அதை ஆதரிப்பவர்களையும் நாம் அணைத்துக் கொள்ள முடியாது.

இறுதியாக யாருக்கு நாம் வாக்களிக்க வேண்டும்? என்ற கேள்விக்குப் பதில்:-

உங்கள் வாக்குகளை வீணாக்காதீர்கள் என்பதுதான் பதில்

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை—1.) அச்சிட்டு, வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா.

---

**கறுப்புப் பணத்தை வெளிக் கொண்டு வர, பதுக்கல் பேர்வழிகளை ஒழிக்க உங்கள் வாக்கு**

**அரிவாள் சுத்தியல் நட்சத்திரத்திற்கே!**